


# கல்கி



KALKI 1-9-1974 60 காசு

sri kamakshi suprabhatam

and other songs in praise of sri kamakshi

Rendered by

M.S.SUBBULAKSHMI

# நீல முகப்பு
# 955




## உழைப்பு
## சக்தி
## பாதுகாப்பு



### எவரெடி 955
### அதன் விலைக்கு சிறந்த மதிப்பு அளிக்கிறது

**உழைப்பு**-சக்தி வீணாகிப்போவதில்லை. ஆதலால், நல்ல நீடித்த உழைப்பிற்கான கூடுதல் சக்தியைப் பெறுகிறீர்கள்.

**சக்தி**—விசேஷ உலோகத்தாலான அடிப்பாகம் பாட்டரிக்குப் பாட்டரி இடைவிடாத தொடர்பை நிச்சயப்படுத்தி அதனால் உண்டாகும் சக்தியனைத்தையும் வழங்குகின்றது.

**பாதுகாப்பு**-ஒன்றின் மேல் ஒன்றுள்ள தடிப்பான ஜாக்கெட் ஒழுகிச் செல்வதைத் தவிர்க்கின்றது-உங்கள் டார்ச்சையும் பாதுகாக்கின்றது.

UC 7954

# எவரெடி

-உன்னதமானவைகளில் முதன்மையானது


திரைப்பட
காட்சி
வரி
குதிரைப்
பந்தய
ஒழிப்பு
மதுவிலக்கு


அரிசி
விலை



நாட்டின் நிலையைப்பற்றி ஏதாவது...
என் பதவிக்காலம்
முடிந்ததும்
கேளுங்கள்,
சொல்கிறேன்!




கல்கி

மலர் 34

இதழ் 5



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# அரசு ரயில் ஓடும்; வாழ்க்கை ரயில் கவிழும்!

**ப**ட்ட காலிலேயே படும், கெட்ட குடியே கெடும் என்பார்கள். பாரதக் குடிமகன் விஷயத்தில் இது நூற்றுக்கு நூறு உண்மையாகி வருகிறது. மத்திய அரசின் பட்ஜெட், இடைக்கால பட்ஜெட், மாநில அரசின் பட்ஜெட், இடைக்கால பட்ஜெட், ரயில்வே பட்ஜெட், இடைக்கால பட்ஜெட் என்று மாறி மாறி அவன் தலையில் பேரிடிகள் விழுந்து கொண்டேயிருக்கின்றன.

தற்போதைக்குக் கடைசித் தாக்குதலாக விளங்கும் ரயில்வே இடைக்கால பட்ஜெட் காரணமாகப் பாரதக் குடிமகனின் வயிறு பற்றி எரிவது போல் அந்த ரயில் எஞ்சினின் பாய்லரில்கூட நெருப்பு ஜுவாலை விடாது !

ஆண்டுக்கு 235 கோடி அதிக வருமானத்துக்கு ரயில் கட்டணங்களை உயர்த்தியிருக்கிறார், மிச்ரா. இதில் எழுபது சதவிதம் சரக்குப் போக்குவரத்துக் கட்டண உயர்வு. இதனால் விலைவாசிகள் விண்ணை எட்டும்போது மக்கள் மண்ணைத் தின்பதா? ஆம், பாரதத்தின் சில பகுதிகளில் மக்கள் புல்லைத் தின்கிற நிலைக்கு ஏற்கனவே வந்து விட்டார்கள். இதனை அரசு பாராளுமன்றத்திலேயே ஒப்புக்கொண்டு விட்டது. இனி மண்ணைத் தின்ன நேர்ந்தாலும் வியப்பதற்கில்லை.

பிரயாணக் கட்டண விகிதங்களையும் ஏகத்தாறுக உயர்த்தியுள்ளார் அமைச்சர். மூன்றும் வகுப்புக்கு இரண்டாம் வகுப்பு என்று பெயர் மாற்றம் செய்து பாரதப் பிரஜையின் அந்தஸ்தை உயர்த்திய மகானுபாவர்கள் இப்போது அந்த அந்தஸ்துக்கான தீர்வையையும் வசூலித்து விட்டார்கள். ஒரு கல்யாணம் கார்த்திகை என்றோ, பிரார்த்தனை க்ஷேத்திராடனம் என்றோ கிளம்பக்கூட இனி ஒரு தடவைக்குப் பத்து தடவையாக யோசிக்க வேண்டும்! 'வேண்டாமே! பிரயாணம் செய்வது குறையட்டுமே!' என்கிறார் ரயில் அமைச்சர். என்ன ஆணவம் !

மமதை தலைக்கேறும்போது அறிவு குழம்புகிறது. இல்லாத போனால் விலைவாசிகளைக் குறைக்க நடவடிக்கை எடுப்போம் என்று ஒரு பக்கம் காட்டுக் கத்தலாகக் கத்திக்கொண்டே மற்றொரு பக்கம் விலைவாசிகள் உயர வழி வகுப்பார்களா ?

ஏர்கண்டிஷன் வகுப்புப் பயணம் விமானப் பயணத்தை விடவும் கிராக்கியானதாகிறது. இதனால் அரசுக்கு ஆதாயமில்லை என்றாலும் நமக்கு நஷ்டம்தான். எப்படியெனில் இந்த வகுப்பில் பயணம் செய்பவர்கள் ஒன்று அரசாங்க உயர் அதிகாரிகளாக இருப்பார்கள்; அல்லது பெரிய கம்பெனிகளின் நிர்வாகிகளாயிருப்பார்கள். அரசாங்க அதிகாரிகளின் செலவை அரசும் கம்பெனி நிர்வாகிகளின் செலவை அந்நிறுவனங்களும் ஏற்கும்போது கடைசியில் அவையெல்லாம் வரி கொடுக்கிற, பண்டம் வாங்குகிற சாமானியன் தலையில்தான் வந்து விடியும்.

லாபமோ நஷ்டமோ எவ்வாறாயினும் மத்திய அரசின் நிதி இலாகாவுக்கு ஆண்டுதோறும் குறிப்பிட்ட அளவு பணம் கொடுத்து விட வேண்டும் என்பதாக ஒரு நிர்ப்பந்தத்துக்கு ரயில்வே உட்பட்டிருக்கிறது. இத்தொகையை ரயில்வே கொடுக்க முடியாது விழிக்கிறது. விட்டுக் கொடுக்க மத்திய அரசுக்கு விருப்பமில்லை. இடையில் அகப்பட்டுக் கொண்டு ரயில் பயணி திணறுகிறான். ரயில்வே பட்ஜெட்டினால் விலைவாசிகள் மேலும் மேலும் உயர, மக்கள் படும் அவதி தாங்கொணாததாகி விடுமே என்பது பற்றி அரசுக்குக் கவலையில்லை. இவர்கள் காகிதத்தில் எழுதி வைத்துவிட்ட திட்டங்களுக்குப் பணம் வேண்டும்! செலவுக்கேற்ப வருவாயைப் பெருக்கிக் கொள்ளத் தீர்மானித்து அடித்துப் பிடுங்குகிறார்கள்.

பம்பாயில் உப்பு கிலோ ஒன்றரை ரூபாய்க்கு விற்கிறதாம். தில்லியில் எப்படியோ? என்றாலும் அங்கு மந்திரிகள் உணவில் உப்புச் சேர்வதாகத் தெரியவில்லை !

# யூகோ பாங்கில்
# இப்பொழுது உங்கள் ஃபிக்ஸெட் டிபாஸிட் 9% க்கு மேலாக பயனுடைய வட்டி பெறுகிறது

ரெக்கரிங் டிபாஸிட்டுடன்
ஃபிக்ஸெட் டிபாஸிட்டை
இணைப்பது மூலம்!

மற்ற விவரங்களுக்கு
உங்கள் அருகிலுள்ள
யூகோபாங்க் கிளையுடன்
தொடர்பு கொள்ளுங்கள்.

தாங்களே
தங்களுக்கு
உதவ மக்களுக்கு
லாபகரமாக
உதவுகிறது

**யூனைடெட் கமர்ஷியல் பாங்க்**




UCOC.19 TAM

ஆனந்த ஆவணி 16
செப்டம்பர் 1, 1974

# இந்த இதழில்

# கல்கி

பாரதப் பிரதமரின் அன்னை இன்று இருந்தால் அவருக்கு எழுபத்தைந்தாண்டு நிறைவுற்றிருக்கும். அஞ்சலிக் கட்டுரை:

**கமலா—75**

நமது விசேஷ நிருபர் கேரளத்தின் தலைநகருக்குச் சென்று பெற்ற அனுபவங்கள் நகர்வலம் பகுதியில் இரண்டாவது கட்டுரை:

**சாதனை மழை; சோதனை மழை; கேரள மழை!**

சிலைத் திருட்டுக்கு உடந்தையாக இருக்க முயன்றவனின் மனத்தைத் திருடிக்கொண்ட பண்டாரத்தின் உருக்கமான கதை, அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் மூன்றும் பரிசு பெற்றது:

**செம்பொற்சோதி**

அன்னை காமாட்சியையும் காஞ்சி முனிவரையும் அட்டைப்படத்தில் காணும் பாக்கியத்தை அருளும் முக்கியதொரு நிகழ்ச்சியை விவரிக்கிறது:

**கானத்தில் வரும் காமாக்ஷியன்னை**

இடைக்கால ரயில்வே பட்ஜெட்டில் அதிகரிக்கப்பட்டுள்ள கட்டணங்கள் போதாவாம்! ரயில் அமைச்சரின் பச்சைக் கொடி நமக்குச் சிவப்பாகத்தான் தெரிகிறது:

**அரச ரயில் ஓடும்; வாழ்க்கை ரயில் கவிழும்!**



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

# என்ன சேதி?

## கணக்கு வழக்குக்கு ஒரு கல்யாணராமன்!

இன்றைக்கு இருக்கும் விலைவாசி நாளைக்கு இல்லை என்னும்போது குடும்பத்தின் கணக்கு வழக்குகளைத் திட்டமிடுவதும் அமல்படுத்துவதுமே பிரும்மப் பிரயத்தனமாக இருப்பது நமக்குத் தெரியும். அவ்வாறிருக்க, பெரிய பெரிய நிறுவனங்களின் செலவினங்களை நிர்ணயிப்பதும் வருவாயைக் கணிப்பதும் எவ்வளவு சிரமம்? திட்டம் செயலாகும்போது நடைமுறையில் ஏற்படக் கூடிய சிக்கல்களைத் தீர்ப்பது எவ்வளவு கஷ்டம்! அதிலும் நமது நாட்டின் வருமான வரிச் சட்டங்கள், கம்பெனிச் சட்டங்களில் புகுந்து புறப்படும்போது பைத்தியம் பிடிக்காமல் இருந்தால் பெரிய காரியம்! அத்தனை சிக்கல்கள், கட்டுப்பாடுகள், அனர்த்தங்கள் உள்ளன அவற்றில். இவற்றையெல்லாம் சமாளித்துக் கொண்டு நிபுணர்களாகவும், ஆலோசகர்களாகவும் விளங்கும் கணக்கு அதிகாரிகளின் ஆற்றல் மலைக்க வைப்பது. இவர்களின் அகில இந்திய சங்கத்தின் தலைவராக நடப்பு ஆண்டுக்கு என்ஃபீல்ட் இந்தியா நிறுவனத்தில் பணியாற்றும் திரு வி. கல்யாணராமன் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார் என்பதை அறிந்து மகிழ்கிறோம். முப்பத்தொன்பது வயதான இவரைவிட இளம் வயதினரான ஒருவர் இன்றுவரையில் இப்பதவியை அலங்கரித்ததில்லை.



## இரக்கமற்ற இன்ஷ்யூரன்ஸ்

பணவீக்கத்தால் ரூபாய் நாளுக்கு நாள் மதிப்பிழந்து கொண்டிருக்கும் தருணத்திலும் ஒருவர் ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் பாலிஸி எடுத்துக் கொள்கிறார் என்றால் அது நடக்கக் கூடாத ஒன்று நடந்து விட்டால் தமது குடும்பம் நடுத் தெருவில் நிற்கக் கூடாதே என்பதற்காகத்தான். அவ்வாறிருக்க எல். ஐ. ஸி.யில் பாலிஸிதாரர் இறந்து விட்டதால் பணம் தருமாறு செய்து கொள்ளப்பட்ட கோரிக்கைகளுள் கடந்த மூன்றாண்டுகளில், எண்பத்தி மூவாயிரம் கோரிக்கைகள் இன்னும் பைசல் செய்யப்படாமலேயே உள்ளன என்பதைப் பார்க்கும்போது அந்தக் குடும்பங்களின் நிலைமையை எண்ணி மனம் பதைக்கிறது.

ஆயுள் இன்ஷியூரன்ஸில் கொஞ்ச நஞ்சம் இருக்கும் நம்பிக்கையையும் இது சிதற அடிப்பதாக உள்ளது. தேசிய மய மோகம் மக்களை வாட்டுவதற்கு மற்றோர் அத்தாட்சி இது.

## சோதனைக் காலத்தில் தலைவராகிறார்!

சர்க்கரை ஆலைகளைத் தேசிய மயமாக்குவது பற்றித் தீவிரமாகப் பேச்சு அடிபட்டு வருகிறது இப்போது. வடக்கே ஓரிரு மாநிலங்களில் உள்ள சர்க்கரை ஆலைகள் நிர்வாக ஆற்றலும், விஞ்ஞான நோக்கும், நவீன சிந்தனையும் பெற்றிராத காரணத்தால், நாட்டிலுள்ளஎல்லாச் சர்க்கரை ஆலைகளையுமே தேசியமயமாக்குதல் என்னும் தலைவலி பிடிக்கும்போலத் தெரிகிறது. இத்தகைய ஓர் இக்கட்டானதும் நாட்டு நலனுக்கு ஊறு விளைவிப்பதுமான ஒரு சூழலில் தமது திரு மருதைப் பிள்ளை அகில இந்திய சர்க்கரை ஆலைகள் சங்கத்தின் நடப்பு ஆண்டுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார். அருணா சர்க்கரை ஆலையின் நிர்வாக இயக்குனர் திரு மருதைப் பிள்ளை. சோதனை மிகுந்த இக் கட்டத்தில் சர்க்கரை ஆலைகளின் நலனும் மக்கள் நலனும் பாதுகாப்புப் பெறுமாறு அவர் சாதனைகள் புரிவார் என்று எதிர்பார்ப்போம்.



## தேசத்துரோகத்தைவிட மோசம்!

நாடு இன்றுள்ள நிலையில், பொருளாதாரம் குடைசாய்வது இன்றோ நாளையோ என்றிருக்கும் கட்டத்தில் எந்தவிதமான வேலை நிறுத்தமுமே தேசத் துரோகமான செயலாகும். அதிலும் அந்நியச் செலாவணி சம்பாதித்துத் தரும் துறையிலும், மின்சாரம்

ராஜாஜி சிந்தனை

## நேருஜி விட்டுப் போன 'சொத்து'!

தனியார் துறையையும் பொருளாதாரப் போட்டா போட்டியையும் இழித்துரைக்கும் விட்னி — பீட்ரைஸ் வெப் ஆகியவர்கள் எழுதிய நூலைப் படித்தபோது ஜவாஹருக்கு எப்படி மெய்சிலிர்ப்பு ஏற்பட்டது என்பது எனக்கு நன்றாக நினைவிருக்கிறது. காங்கிரஸ் காரியக் கமிட்டி கூட்டங்களில் இந்நூலை அவர் அடிக்கடி மேற்கோள் காட்டுவார். சர்தார் படேலுக்கு வேடிக்கையாக இருக்கும்.

நாளாவட்டத்தில் பிரிட்டிஷார், ஆட்சியை காங்கிரஸிடம் ஒப்படைத்தார்கள். காந்திஜியின் விருப்பப்படி நேருஜி பொறுப்பேற்றார். என்றாலும் நாசகரமான பரிசோதனைகள் நிகழாமல் சிறிது காலத்துக்குக் காக்க முடிந்தது. ஆனால் வல்லபபாய் பட்டேல் காலமான பிறகு நிலைமை மாறிவிட்டது. அயல்நாடுகளில் ஏராளமாய்க் கடன் வாங்குவதும் ராட்சத ஆலைகள் அமைக்கும் திட்டங்களில் கணக்கின்றிச் செலவு செய்வதும் ஆரம்பமாயின. கடைசியில் பத்தாண்டுகளுக்கு முன்னால் ஒரு கட்சியின் தீர்மானம் இந்தியாவின் மீது சோஷலிஸத்தை வலுக்கட்டாயமாகத் திணித்தது. நாடு முழுவதற்குமான திட்டங்களை வகுக்கும் பொறுப்பு மத்திய அரசிடம் ஒப்புவிக்கப்பட்டது. கூடவே 'மதச் சார்பற்ற அரசு' என்பதாக ஓர் அர்த்தமற்ற சொற்றொடரையும் ஏற்றுக் கொண்டு கடவுளை நிராகரிக்கும் காரியமும் தொடங்கி விட்டது!

சுயராஜ்யா, பிப்ரவரி 26, 1966

போன்ற உற்பத்திக்கு அடிப்படையான ஆதாரத் தேவைத் துறையிலும் உள்ளவர்கள் வேலைநிறுத்தம் செய்வதை மன்னிக்கவே முடியாது. இவர்கள் போக்கை வர்ணிக்கத் தேசத் துரோகம் என்பதை விடக் கடுமையான வார்த்தை தேவை. மேலும் ஏர் இந்தியாவிலும், நெய்வேலியிலும் வேலை நிறுத்தம் செய்கிற, செய்த நபர்கள் யார்? சாமானியத் தொழிலாளிகளா? நல்ல கல்வி அறிவு பெற்று உயர் உத்தியோகத்தில் அமர்ந்து, கைநிறையச் சம்பளமும் வாங்குகிறவர்கள். இவர்கள் வேலைநிறுத்தம் செய்வதை அரசு பொறுத்தாலும் கூட மக்கள் சகிக்கவே மாட்டார்கள். ஜனநாயகத்தில் மக்களின் ஆதரவு பெறாத ஒரு வேலைநிறுத்தம் வெற்றி பெற்றாலும் அது உண்மை வெற்றியாகாது.

எந்த விதமான வேலைநிறுத்தமுமே இன்னும் சில ஆண்டுகளுக்குக் கூடாது; மீறினால் அது தேசத் துரோகமாகக் கருதப்படும் என்று அரசு ஓர் அவசரச் சட்டம் பிறப்பிக்கட்டும்.

### தலைக்குத் தலை நாட்டாண்மையா?

பிரதமரின் அருட்பார்வை இளைஞர் பக்கம் திரும்பியிருக்கிறது. பிடித்தது அவர்களுக்கும் கேடுகாலம்! தில்லியில் இளைஞர் விழா நடத்தினார் பிரதமர். அதற்கு ஆயிரக் கணக்கில் இளைஞர்களைத் திரட்டக் கையாளப்பட்ட முறைகள் கீழ்த்தரமானவை. இளைஞர்களிடையே கட்சிச் செல்வாக்கை வளர்த்துக் கொள்ள அரசாங்க யந்திரம் முழுமையாகப் பயன்படுத்தப்பட்டது. உதவியளித்த பலருக்குப் பலவிதமான சலுகைகள் காட்டப்பட்டன. இளைஞர்களைத் திரட்ட அரசாங்கம் தகிடுதத்தத்தில் இறங்கியபிறகு அவ்வாறு வரவழைக்கப்பட்ட வாலிபர்கள், யுவதிகள் மட்டும் யோக்கியப் பொறுப்புடன் நடந்து கொள்ள வேண்டும் என்பதாக எப்படி எதிர்பார்க்க முடியும்? இளைஞர்களின் நடத்தை தடம் மாறிப் போனதில் வியப்பில்லை. எல்லாமே கேலிக்கிடமாகி இமயம் முதல் குமரிவரை சிரிப்பாய்ச் சிரிக்கிறது. கூடிய இளைஞர்களுக்குப் பிரதமர் வழங்கிய அறிவுரையாவது ஒழுக்கத்தை வற்புறுத்தியதா? அதுவுமில்லை! உங்கள் வேகத்தையும் உணர்ச்சிக் கொந்தளிப்பையும் கள்ள மார்க்கெட்காரர்கள், கறுப்புப் பணமுள்ளவர்கள் ஆகியோருக்கு எதிராகக் காட்டுங்கள் என்று திருவாய்மலர்ந்தருளினார் இந்திரா.

தலைக்குத் தலை நாட்டாண்மை என்றால் அரசு எதற்கு? ஸி. ஐ. டி., ஸி. பி. ஐ. எல்லாம் எதற்கு? போலீஸ் எதற்கு? அராஜகத்தை அவிழ்த்து விடுவதா பிரதமரின் நோக்கம்?

### இளைஞர்களின் எதிர்காலம்?

வன்முறைகளில் இறங்கும் இளைஞர்களைக் கட்டுப்படுத்த — அவர்களைப் பொறுப்புள்ளவர்களாக நடந்துகொள்ளச் செய்ய என்ன வழி என்று ஆராய ஒரு கருத்தரங்கு நடந்தது சென்னையில்.

இளைய பாரதத்தினருக்கு இன்றைய முக்கிய தேவை நம்பிக்கையூட்டும் எதிர்காலம். படிப்பு முடிந்ததும் உனக்கு வேலை வாய்ப்பு இருக்கிறது; வருவாய்க்கு வழியுண்டு என்ற நம்பிக்கை மட்டும் பிறக்கட்டும், இளைஞர்களின் ஆவேசம் அடுப்பிலிருந்து இறக்கிய பாலாக அடங்கிவிடும்.

இது விஷயத்தில் நமது கல்வி முறையிலேயே கோளாறு உள்ளது. ருஷ்யா, மேற்கு ஜெர்மனி போன்ற நாடுகளில் அசாதாரணமான அறிவாற்றலைக் காண்பிக்கும் மாணவர்களை மட்டுமே மேற்படிப்புக்கு அநுமதிக்கிறார்கள். மற்றவர்களைச் சரீரத்தால் உழைப்பதில் பெருமை கொள்ளச் செய்கிறார்கள். தொழிற்பயிற்சி அளிக்கிறார்கள். இவர்களுக்கு வேலை தர நாடெங்கிலும் தொழிலகங்கள் பெருக ஊக்கம் அளிக்கிறார்கள். அதனால் அங்கே உற்பத்தி பெருகிச் சுபிட்சமும் நிலவுகிறது. இங்கோ...?

# பச்சிள மேனியைக் காப்பதற்கே
# பாப்பா காட்டும் வழி உமக்கே

## ஜான்ஸன்ஸ்* பேபி பவுடர்—

மேனியிலே அதி நுட்பமான பகுதி- உங்கள் முகத்தின் சருமம்: பச்சிளம் தளிர் போன்ற அதனைப் பாதுகாக்கத் தக்க பவுடர் எது? பாப்பாவின் மேனியைக் காப்பாற்றும் பூப்போன்ற மென்மையான பவுடரே தேவை. மழமழ மென்மையோடு குளுமையாக வைத்திருப்பதற்கு — ஜான்ஸன்ஸ் பேபி பவுடர். எங்கெங்குமே, எழில்கொஞ்சும் இளம் செல்வியர் உபயோகிக்கும் பவுடர்.

**பிறந்த நாளையப் பிஞ்சு மென்மையோடு**
**உங்கள் மேனி மிளிரப் பேருதவி**

*Johnson & Johnson**




* Trade Mark
© Johnson & Johnson.

லின்டாஸ்-J&J. 4-140 TM

# சிவசக்தி : நாராயண சகோதரி





4

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி
காமகோடி சங்கராசாரிய சுவாமிகள்

அம்பாளுக்கும் மகாவிஷ்ணுவுக்கும் பேதமில்லை என்பதைத் தத்துவ ரீதியில் சொன்னேன். இப்போது உங்களுக்குத் தெரியாத ஒரு கதை சொல்கிறேன். ராமாயணம் உங்கள் எல்லோருக்கும் தெரிந்த கதைதான். ஆனால் அந்தத் தெரிந்த கதையையே உங்களுக்குத் தெரியாத மாதிரி சொல்கிறேன். வால்மீகி, கம்பர், துளசி தவிர ஆனந்த ராமாயணம், அற்புத ராமாயணம், துர்வாஸ ராமாயணம் என்றெல்லாம் பல இருக்கின்றன. அதில் ஏதோ ஒன்றில் இந்த விஷயம் இருக்கிறது.

அம்பாள்தான் ஸ்ரீ ராமனாக அவதரித்தாள் என்பது கதை. ஈசுவரனே சீதையாக உடன் வந்தார். ஸ்ரீராமன் நல்ல பச்சை நிறம். 'மரகதமணி வர்ணன்' என்பார்கள். அம்பிகையை 'மாதா மரகத ச்யாமா' என்கிறார் காளிதாஸர். முத்துஸ்வாமி தீக்ஷிதரும் 'மரகதச் சாயே' என்று மீனாக்ஷியைப் பற்றிப் பாடுகிறார். சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரத்தைத் தாண்டி மூல காரணமாக இருக்கிறபோது பராசக்தி செக்கச் செவேல் என்று இருந்தபோதிலும் மும்மூர்த்திகளில் ஒருத்தருக்குப் பத்தினியாகிப் பார்வதியாக இருக்கிறபோது பச்சையாகத்தான் இருக்கிறாள். இவள்தான் ஸ்ரீராமசந்திர மூர்த்தியாக வந்தாள். பரமேசுவரன் சீதா தேவியானார்.

பழைய காலத்தில் சின்ன வயசிலேயே குழந்தைகளுக்குக் கல்யாணம் செய்வார்கள். அப்போது ஹோமம் முதலிய கர்மங்களால் குழந்தைகளுக்கு அலுப்புத் தட்டிவிடப் போகிறதே என்று குஷிப்படுத்துவதற்காக விளையாடல், ஊஞ்சல், நலங்கு, ஊர்வலம் என்றெல்லாம் வைத்திருந்தார்கள். ஊர்வலத்தின்போது கல்யாணப் பெண்ணுக்குப் பிள்ளை வேஷமும், மாப்பிள்ளைக்குப் பெண் வேஷமும் போடுவார்கள். இந்த மாதிரி லோகத்தில் ராட்சஸ பயத்தைப் போக்கி விளையாட்டாக ஊர்வலம் வருவதற்கு அம்பாள் ராமனாகவும் ஈச்வரன் சீதையாகவும் வேஷம் போட்டுக் கொண்டார்கள். இது ஒருத்தருக்கும் தெரியாது. ஸ்ரீ ராமனும் சீதையும் கூட இதை மறந்தே போனது போல் இருந்தார்கள். ஆனால் ரொம்பவும் உணர்ச்சி வேகம் ஏற்பட்டால் மனசின் அடியிலே எங்கோ மறைந்திருப்பது கூட வெளியிலே வந்து விடுகிறது அல்லவா? இப்படி ஒரு கட்டம் ராமாயணத்தில் வந்தது.

ஸ்ரீராமன் சீதையை விட்டு விட்டுக் காட்டுக்குப் போவது என்று தீர்மானம் பண்ணி விடுகிறார். அப்போது தேவிக்கு உணர்ச்சி பீறிக் கொண்டு வந்து விடுகிறது. 'காட்டிலே துஷ்டர் பயம், மிருக பயம் இருக்கிறது என்பதால் பெண்டாட்டியை அழைத்துப் போக மறுக்கிறீரே. இவரும் ஓர் ஆண் பிள்ளையா?'' என்று ஆவேசத்தில் அவளுக்கு மகா கோபம் வர, அந்த வேகத்தில் ஓர் உண்மையைச் சொல்லி விடுகிறாள்.

''உம்மை மாப்பிள்ளையாக வரித்த என் பிதா ஜனகர், நீர் புருஷ வேஷத்தில் வந்திருக்கிற ஒரு ஸ்திரீ (**ஸ்திரியம் புருஷ விக்ரஹம்**) என்பதைத் தெரிந்து கொள்ளாமல் போனாரே'' என்கிறாள் சீதா தேவி. இது சாட்சாத் வால்மீகி ராமாயண வசனம்.

ஸ்ரீ ராமனுக்கு அவர் அம்பாள்தான் என்பதை இப்படி சூட்சுமமாக ஞாபகப்படுத்தி விட்டாள் சீதை. உடனே அவருக்கு வந்த காரியம் நினைவு வந்தது. ராட்சஸ ஸம்ஹாரம் செய்ய வேண்டும் என்ற நினைப்பு வந்ததும், அதற்கு அநுகூலமாகவே விளையாட்டு நடப்பதற்காகச் சீதையை அழைத்துக் கொண்டு காட்டுக்குப் போனார்.

இவரால் ஸம்ஹரிக்கப்பட வேண்டிய ராவணனோ பெரிய சிவ பக்தன். ஆதியில் அவனுக்குச் சிவனையே கைலாசத்திலிருந்து லங்கைக்கு இழுத்துக் கொண்டு வந்து அசோக வனத்தில் வைத்துப் பூஜை செய்ய வேண்டும் என்று ஆசை. அதற்காகத்தான் கைலாசத்தைப் பெயர்த்துப் பார்த்தான். அப்போது அம்பிகை ஈசுவரனைக் கட்டிக் கொள்ள, அவர் விரல் நுனியால் மலையை அழுத்திவிட்டார். தப்பினோம் பிழைத்தோம் என்று ராவணன் லங்கைக்கு ஓடி வந்தான். மகா சிவ பக்தனாகையால் இவனுக்குத் தன்னுடைய ஈசுவரன்தான் சீதையாக வந்திருக்கிறார் என்று தெரிந்து விட்டதாம். முன்பு அம்பாளால்தான் தன் காரியம் கெட்டுப் போச்சு என்கிறகோபத்தில், இப்போது அவள் தலையீடு இருக்கக் கூடாது என்றே ராமரை அப்புறப்படுத்தி விட்டுச் சீதையைத் தூக்கி வந்து அசோக வனத்தில் வைத்தானாம். ஆனாலும் ராட்சஸ அறிவானதாலும் அம்மையப்பனை ஜோடியில் ஒன்றை விட்டு ஒன்றை மட்டும் பிடித்துக் கொண்டதாலும் ராவணனுடைய அன்பு விகாரப்பட்டுப் போயிற்று. இருந்தாலும் உள்ளூற இருந்த சிவ பக்தியினால் இவனுக்கு அவதார ரகசியம் அவ்வப்போது தெரிந்தது. ஆஞ்சநேயரைப் பார்த்தவுடன் ராவணன் 'இவர் யார், நந்தியம் பெருமானோ?' என்று நினைக்கிறான். **'கிமேஷ பகவாந் நந்தீ?'** என்பது வால்மீகி ராமாயண வசனம். சீதாராமர்களின் பரம தாஸனாக இருக்கப்பட்ட ஹனுமாரைப் பார்த்ததும் கைலாஸத்தில் ஸ்வாமிக்கும் அம்பாளுக்கும் தாஸனாக இருக்கிற நந்திதான் அவர் என்பது புரிந்தது போல் ராவணன் நினைக்கிறான்.

அம்பாளை நாராயண ஸகோதரி என்று சொல்வதற்கு இதெல்லாம் பக்கபலமாக இருக்கின்றன.

SEVENTEEN



INTEREST

# மகிழ்வுடன் ஞாபகமூட்டுகின்றோம்

## இந்தியன் பாங்க்

23-7-74 அன்றும் அதற்கு பின்பும்
செய்யப்படும் டெபாசிட்டுகளுக்கு மட்டுமின்றி
23-7-1974க்கு முன்பு செய்யப்பட்ட
டெபாசிட்டுகளுக்கும்
எஞ்சியுள்ள காலத்திற்கு கீழ்க்கண்டபடி
அதிக வட்டி விகிதங்கள் அளிக்கப்படும்
என்பதை தமது ஆதரவாளர்களுக்கு
ஞாபகமூட்டுகிறது.

| | |
|---|---|
| ஐந்து ஆண்டுகளுக்கு மேல் | 10% |
| மூன்று ஆண்டுகள் மற்றும் அதற்குமேல் | 9% |
| ஒரு ஆண்டு மற்றும் அதற்குமேல் | 8% |
| ஒன்பது மாதங்கள் மற்றும் அதற்குமேல் | 7% |
| ஆறு மாதங்கள் மற்றும் அதற்குமேல் | 6% |
| 91 நாட்கள் மற்றும் அதற்குமேல் | 5.5% |

மேலும் எமது ஆதரவாளர்கள் ஆண்டுக்கு
நூற்றுக்கு 17 சதவிகிதம் வரை
வட்டி பெறும் வகையில் எம்மிடம் டெபாசிட்
திட்டங்கள் உள்ளன.

**விவரங்களுக்கு அருகில் உள்ள
எமது கிளையில் விசாரிக்கவும்.**

## இந்தியன் பாங்க்

(இந்திய அரசுக்கு முழுதும் சொந்தமானது)
தலைமை அலுவலகம்: 17 வடக்கு கடற்கரை சாலை,
சென்னை-600 001.




உங்கள் நலனில் அக்கரையுள்ள பாங்க்

செலவை குறையுங்கள் – அதிகம் சேமியுங்கள்
உங்கள் சேமிப்பு வளர வகை செய்யுங்கள்

## ஏழாம் அத்தியாயம்

# மகேந்திர ஜாலங்கள்

காஞ்சி மாநகரில், பிரதான மந்திராலோசனை மண்டபத்தில் சபை கூடியிருந்தது. மந்திரி மண்டலத்தாரும் அமைச்சர் குழுவினரும் பிரசன்னமாயிருந்தார்கள். சக்கரவர்த்தியும் குமார சக்கரவர்த்தியும் சிம்மாசனங்களில் நடு நாயகமாக வீற்றிருக்க, அருகே ஒரு தவிசு பீடத்தில் சேனாபதி கலிப்பகையும் அமர்ந்திருந்தார்.

தளபதி பரஞ்சோதியை மட்டும் அவ்விடத்திலே காணவில்லை. கோட்டைப் பாதுகாப்பு முயற்சியில் ஈடுபட்டிருந்தபடியால் அவரால் மந்திராலோசனைக்கு வர முடியவில்லை போலும்.

சபையில் கூடியிருந்தவர்களின் முகத்திலெல்லாம் இலேசாகக் கவலைக் குறி தோன்றியது. எல்லாரையும் காட்டிலும் அதிகமான கவலை, சபையில் எழுந்து நின்ற பண்டகசாலை அமைச்சர் பராந்தக உடையார் முகத்தில் காணப்பட்டது.

''உடையாரே! முற்றுகை ஆரம்பிக்கும் சமயத்தில் நீர் உறுதியாகச் சொன்னீரல்லவா? குறைந்தது பதினைந்து மாதங்களுக்கு வேண்டிய தானியங்களை நம் பண்டகசாலையில் பத்திரப்படுத்தியிருப்பதாக! — முற்றுகை ஆரம்பித்து ஏழு மாதங்கள்தானே ஆகின்றன? இன்னும் எட்டு மாதங்களுக்கு இருக்க வேண்டுமே? மூன்று மாதங்களுக்குத்தான் தானியம் இருக்கும் என்று சொல்லுகிறீரே. அது எப்படி?'' என்று சக்கர



வர்த்தி கேட்டார். மகேந்திர பல்லவரின் குரல் மிகக் கடுமை பெற்றிருந்தது. அவருடைய முகத்தில் சுருக்கங்கள் அதிகமா யிருந்தன.

பராந்தக உடையார் குரலில் கலக்கத்துடனும், சொல்லில் தடுமாற்றத்துடனும் கூறினர்: ''பல்லவேந்திரா! நான் எதிர்பார்த்தபடி சில காரியங்கள் நடக்கவில்லை; எதிர்பாராத காரியங்கள் சில நடந்து விட்டன. நகரைவிட்டு வெளியேறிய ஜனங்கள் பலர், புள்ளலூர்ச் சண்டைக்குப் பிறகு நகருக்குத் திரும்பி வந்துவிட்டார்கள். தொண்டை மண்டலத்திலுள்ள சிற்பிகள் அனைவரையும் தலைநகருக்குள்ளே கொண்டு வந்து சேர்க்க வேண்டும் என்று தங்களுடைய ஆக்ஞை பிறந்தது. இதனால் ஐயாயிரம் பேர் அதிகமானார்கள். நமது கடிகைகள் — கல்லூரிகள் எல்லாவற்றையும் மூடி, ஆசிரியர்களையும் மாணாக்கர்களையும் வெளியே அனுப்பிவிடலாம் என்று முதலில் யோசனை செய்திருந்தோம். கடைசி நேரத்தில் தாங்கள் அவ்விதம் செய்ய வேண்டாம் என்று கட்டளையிட்டு விட்டீர்கள்.''

''இவ்வளவுதானா? இதனாலேயே ஐந்து மா த ங் க ளு க் கு ரி ய உணவு குறைந்துபோய் விட்டதா?'' என்று சக்கரவர்த்தி கேட்டார்.

'' அடியேனும் ஒரு பெரிய தவறு செய்துவிட்டேன். நகரில் உள்ள புருஷர்கள், ஸ்திரீகள், குழந்தைகளை மட்டும் கணக்கெடுத்துக் கொண்டு, பதினைந்து மாதங்களுக்கு உணவு இருப்பதாகச் சொன்னேன். கறவைப் பசுக்கள் கோயில் மாடுகள், குதிரைகள் இவற்றைக் கணக்கில் சேர்க்கவில்லை. மாடுகளுக்கும் குதிரைகளுக்கும் வைக்கோலும் புல்லும் கிடைக்காதபடியால்தானியத்தையே தீனியாகக்கொடுக்க வேண்டியதாகி விட்டது'' என்றார் அமைச்சர்.

''நல்லது, பராந்தகரே! தொண்டைமான் இளந்திரையன் வம்சத்தில் பிறந்த காஞ்சி மகேந்திர பல்லவன், வாதாபிப் புலிகேசியிடம் சரணாகதி யடைய நேர்ந்தால் அந்தப் பழியைக் கோயில் மாடுகள் மீதும், தேர்க் குதிரைகள் மேலும் போட்டுவிடலாம் அல்லவா?'' என்று கூறிவிட்டுச் சக்கரவர்த்தி சிரித்தார். அந்தச் சிரிப்பில் கோபம் அதிகமாய்த் தொனித்ததா, ஏளனம் அதிகமாய்த் தொனித்ததா என்று சொல்லுவதற்கு முடியாமல் இருந்தது.

அப்போது நரசிம்மவர்மர் துள்ளி எழுந்து, ''அப்பா! என்ன வார்த்தை சொன்னீர்கள்? வாதாபிப் புலிகேசியிடம் மகேந்திர பல்லவர் சரணாகதி அடைவதா? ஓர் இலட்சம் பல்லவ வீரர்கள் ஏழு மாதங்களாக மூன்று வேளை உண்டும் உறங்கியும் இந்தக் கோட்டைக்குள்ளே எதற்காக அடைபட்டுக்கிடக்கிறார்கள்? தந்தையே! நமது பண்டகசாலை அமைச்சரின் கணக்குப் பிழையும் ஒருவிதத்தில் நல்லதாகவே போயிற்று. இப்போதாவது கட்டளை இடுங்கள். கோட்டைக்





குள்ளே ஏழு மாதங்கள் ஒளிந்து கொண்டிருந்தது போதும். உலகமெல்லாம் நம்மைப் பார்த்துச் சிரித்தது போதும். அப்பா! இப்போதாவது வாதாபிப் படைகளைத் தாக்கி நிர்மூலம் செய்யும்படி அடியேனுக்குக் கட்டளையிடுங்கள்!'' என்று ஆத்திரமும் அழுகையுமாய்க் கூறிவிட்டு, மகேந்திர பல்லவரின் முன்னால் தரையில் விழுந்து அவருடைய பாதங்களைப் பற்றிக் கொண்டார்.

மகேந்திர பல்லவர் தமது கண்களில் துளித்த நீர்த் துளியை மறைப்பதற்காக முகத்தைப் பின்புறமாகத் திருப்பினார்.

ஒரு நொடி நேரத்தில் சக்கரவர்த்தி மீண்டும் சபையின் பக்கம் திரும்பிய போது அவர் முகத்தில் பழையபடி கடுமையும் ஏளனப் புன்னகையும் குடி கொண்டிருந்தன. தம் பாதங்களைப் பற்றிக் கொண்டு தரையில் கிடந்த மாமல்லரை அவர் தூக்கி நிறுத்தி, ''மாமல்லா! உன்னை வெகு காலம்

நான் அந்தப்புரத்திலேயே விட்டு வைத்திருந்தது பிசகாய்ப் போயிற்று. மூன்று தாய்மார்களுக்கு மத்தியில் நீ ஒரே மகனாக அகப்பட்டுக் கொண்டிருந்தாய் அல்லவா? அதனாலேதான் பெண்களுக்குரிய குணங்களான ஆத்திரமும் படபடப்பும் உன்னிடம் அதிகமாய்க் காணப்படுகின்றன. உலகில் வீரச் செயல்கள் புரிய விரும்பும் ஆண் மகனிடம் இத்தகைய படபடப்பும் ஆத்திரமும் இருக்கக் கூடாது. நரசிம்மா! மல் யுத்தத்தில் மகா நிபுணனான உனக்கு இதை நான் சொல்ல வேண்டுமா?'' என்றார்.

மாமல்லருடைய உதடுகள் துடித்தன. தந்தையின் வார்த்தைகளுக்கு மறுமொழி சொல்ல அவருடைய உள்ளத்திலிருந்து வார்த்தைகள் பொங்கி வந்தன. ஆனால், அதிக ஆத்திரத்தினா



லேயே அவரால் பேச முடியாமற் போய் விட்டது.

மகனுடைய நிலையைக் கண்ட மகேந்திர பல்லவர், ''குழந்தாய்! நீண்டகாலமாகப் பொறுத்து வந்திருக்கிறாய். இன்னும் சில நாட்கள் பொறு. நீயும், நம் பல்லவ வீரர்களும் உங்களுடைய வீரதீரத்தையெல்லாம் காட்டுவதற்குரிய சந்தர்ப்பம் சீக்கிரத்தில் வரப் போகிறது. வாதாபிப் படை இன்னும் சில தினங்களுக்குள் கோட்டையைத் தாக்கும் என்று எதிர்பார்க்கிறேன். அந்தத் தாக்குதல் வெகு கடுமையாயிருக்கும் என்றும் எண்ணுகிறேன். அதைச் சமாளிப்பதற்கு நாமும் நமது பூரண பலத்தையும் பிரயோகிக்க வேண்டியதாயிருக்கும். பல்லவர் வீரத்துக்கு மகத்தான சோதனை வரப் போகிறது. அதற்கு நாம் எல்லோரும் ஆயத்தமாக வேண்டும்!'' என்றார்.

இவ்விதம் மாமல்லனைப் பார்த்துக் கூறிய பிறகு, பண்டகசாலை அமைச்சரைப் பார்த்து மகேந்திர பல்லவர், ''பராந்தகரே! இன்று முதல் காஞ்சி நகரில் உள்ளோர் அனைவரும் மாடுகளும் குதிரைகளும் உள்படச் சமண நெறியை மேற்கொள்வோமாக!'' என்றதும், சபையில் இருந்த அனைவருக்குமே தூக்கி வாரிப் போட்டது.

''ஒரே ஒரு காரியத்தில் மட்டும்தான் சொல்கிறேன்: அதாவது, இரவில் உணவு கொள்வதில்லை என்ற சமண முனிவர்களின் விரதத்தை எல்லோரும் கடைப்பிடிக்க வேண்டும். இதுவரை நீங்கள் கொடுத்து வந்த உணவுப் படியில் மூன்றில் ஒரு பங்கைக் குறைத்து விடுங்கள். அரண்மனைக்கும் ஆலயங்களுக்கும் உள்படச் சொல்லுகிறேன். இனி மேல் காஞ்சி நகரில் உள்ளவர்களுக்கெல்லாம் தினம் இரண்டு வேளை தான் உணவு. இதன் மூலம் கைவசமுள்ள தானியத்தை நாலரை மாதங்கள் நீடிக்குமாறு செய்யலாம் அல்லவா? மந்திரிமார்களே! நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?'' என்று சக்கரவர்த்தி கேட்கவும், முதன் மந்திரி சாரங்க தேவர் ''பிரபு! கோட்டை முற்றுகை நாலரை மாதங்களுக்கு மேல் நீடிக்காது என்று தாங்கள் அபிப்பிராயப்படுவதாகத் தெரிகிறது'' என்றார்.

''இல்லை; நாலரை மாதங்கள்கூட நீடிக்கும் என்று நான் நினைக்கவில்லை. முன்ஜாக்கிரதையாக உணவை மூன்றில் ஒரு பங்கு குறைக்கலாம் என்று சொன்னேன். புலிகேசி இன்னும் ஒரு வாரத்தில் கோட்டையைத் தாக்கத் தொடங்குவான் என்று எதிர்பார்க்கிறேன்....''

''பிரபு! அப்படித் தாங்கள் எதிர்பார்ப்பதற்குத் தக்க காரணங்கள் இருக்கத்தான் வேண்டும்'' என்றார் சாரங்க தேவர்.

''ஆம்; அவற்றை உங்களுக்கும் சொல்ல விரும்புகிறேன்: சபையோர்களே! உணவு நெருக்கடியைப் பொறுத்த வரையில் நம்மைக் காட்டிலும் புலிகேசியின் நிலைமை ஆபத்தானது. வாதாபிப் படையினர் மூன்று மாத காலமாக அரை வயிறு உணவு உண்டுதான் ஜீவித்து வருகிறார்கள். புலிகேசி வாதாபியிலிருந்து புறப்பட்ட போது ஐந்து இலட்சம் வீரர்களுடனும், பதினையாயிரம் யானைகளுடனும் புறப்பட்டான். இப்போது வாதாபிப் படையில் மூன்றரை இலட்சம் வீரர்கள் தான் இருக்கிறார்கள். பதினாயிரம் யானைகள் மட்டுமே இருக்கின்றன. சபையோர்களே! இன்னும் ஒரு மாதம் போனால் இவர்களிலும் பாதிப் பேர் பஞ்சத்திலும் நோயிலும் மடிந்து

# வயது 16 அனிதாவுக்கு
# காண்பவர் கவனம்
# கவரும் எழில் தனக்குண்டென
# அறிகிறாள் அவள்






அவளது
அழகிய சருமத்தை,
இயல்பாகவே
தூய நறுமணம்
கொண்டு
பாதுகாக்கும் சோப்

## மைசூர் சாண்டல்

உங்கள் சருமம் மாசு
மறுவற்று மிருதுவாக மிளிர
மைசூர் சாண்டல் சோப்.

தயாரிப்பாளர்கள்:
கவர்மெண்ட் சோப் பாக்டரி, பெங்களூர்.



பூரண விற்பனையாளர்கள்: மைசூர் சேல்ஸ் இண்டர் நேஷனல் லிமிடெட்
பெங்களூர் - பம்பாய் - புது டில்லி - கல்கத்தா - சென்னை - செகந்திராபாத்

MCA/MSIL/SS/1

போவார்கள். யானைகளின் கதி என்ன ஆகுமோ தெரியாது. ஆகையால், புலிகேசி சீக்கிரத்தில் கோட்டையைத் தாக்கித்தான் ஆக வேண்டும். இந்தத் தாக்குதல் வெகு மூர்க்கமாய் இருக்கும் என்பதிலும் சந்தேகமில்லை.''

முதல் அமைச்சர் ரணதீர பல்லவ ராயர், ''பல்லவேந்திரா! இந்த மாதிரி அதிசயத்தை இவ்வுலகம் எப்போதும் கேள்விப்பட்டதில்லை. முற்றுகைக்கு உள்ளானவர்கள் பசி, பட்டினிக்கு ஆளாகி மடிவதுண்டு; எதிரியிடம் சரணம் அடைந்ததும் உண்டு. ஆனால், முற்றுகை இடுகிறவர்கள் பட்டினிக்கு ஆளானார்கள் என்று கதைகளிலேகூடக் கேட்டதில்லை!'' என்றார்.

''ஆம்; பல்லவராயரே! திரிபுரம் எரித்த பெருமானின் அருளினால் அம்மாதிரி அதிசயம் நடக்கிறது. தொண்டை மண்டலத்துக் கிராமங்



களில் உள்ள ஜனங்கள் எதிரிகளுக்கு ஓர் ஆழாக்கு அரிசியோ, ஒரு பிடி கம்போ கொடுக்கவும் மறுத்திருக்கிறார்கள்; கையில் உள்ள தானியத்தையெல்லாம் வெகு பத்திரமாகப் புதைத்து வைத்திருக்கிறார்கள். சபையோர்களே! தொண்டை மண்டலத்து ஏரிகள்கூட நமக்குப் பெரிய உதவி செய்திருக்கின்றன. சென்ற தை மாதத்தில் எக்காரணத்தினாலோ நம் நாட்டு ஏரிகள் எல்லாம் திடீர் திடீர் என்று உடைத்துக் கொண்டுவிட்டன. அப்படி ஏற்பட்ட உடைப்பு வெள்ளத்தினால் வாழைத் தோட்டங்கள், தென்னந் தோப்புகள் எல்லாம் பாழாயின. கோடைக் காலத்துச் சாகுபடியும் நடக்கவில்லை. இதனாலெல்லாம் புலிகேசியின் போர்வீரர்களுக்கும் போர் யானைகளுக்கும் உணவு கிடைக்கவில்லை.''

சேனாபதி கலிப்பகை எழுந்து, ''சபையோர்களே! தொண்டை மண்டலத்து ஏரிகள் நமது கட்சியில் சேர்ந்து உடைத்துக் கொண்டு பகைவர்களைப் பட்டினிக்குள்ளாக்கியது உண்மைதான். ஆனால், அவை தாமாக உடைத்துக் கொள்ளவில்லை. விசித்திரசித்தரான நமது மன்னரின் மகேந்திர ஜால வித்தையிலேதான் ஏரிகள் எல்லாம் உடைத்துக் கொண்டன'' என்றார்.

''நான் செய்தது ஒன்றுமில்லை. சத்ருக்னனுடைய தலைமையில் நமது ஒற்றர் படை வெகு நன்றாய் வேலை செய்திருக்கிறது. தொண்டை மண்டலத்தில் உள்ள கோட்டத் தலைவர்களும் வெகு திறமையுடன் காரியம் செய்திருக்கிறார்கள். நாட்டில் பஞ்சம் வந்தாலும் வரட்டும் என்று ஏரிகள், அணைக்கட்டுகள் எல்லாவற்றையும் அவர்கள் வெட்டிவிட்டிருக்கிறார்கள். சபையோர்களே! தொண்டை மண்டலத்துப் பிரஜைகள் இந்த யுத்தத்தில் செய்திருக்கும் உதவிக்கு நூறு ஜன்மம் எடுத்து நான் அவர்களுக்குத் தொண்டு செய்தாலும் ஈடாகாது'' என்று சக்கரவர்த்தி கூறியபோது அவருடைய குரல் உணர்ச்சியினால் தழுதழுத்தது.

சற்று நேரம் சபையில் மௌனம் குடிகொண்டிருந்தது. பிறகு முதல் மந்திரி சாரங்கதேவர், ''பல்லவேந்திரா! புலிகேசி, பாண்டியனைச் சந்திக்கக் கொள்ளிடக் கரைக்குச் சென்றிருப்பதாகத் தெரிகிறதே! பாண்டியன் ஒரு வேளை வாதாபிப் படைக்கு வேண்டிய உணவுப் பொருள் கொடுக்கலாம் அல்லவா?'' என்றார்.

''ஆம், மந்திரி! பாண்டியனிடம் உணவுப் பொருள் உதவி கோருவதற்காகத்தான் புலிகேசி தெற்கே போயிருக்கிறான். ஆனால், அந்த உதவி அவனுக்குக் கிடைக்கும் என்று நான் கருதவில்லை. தவிரவும், புலிகேசி சீக்கிரத்தில் வாதாபிக்குத் திரும்ப வேண்டிய காரணங்களும் ஏற்பட்டிருக்கின்றன. சபையோர்களே! ஒவ்வொரு நிமிஷமும் தெற்கேயிருந்து முக்கியமான செய்தியை எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன்!'' என்று சொல்லிக் கொண்டே மகேந்திர பல்லவர் மண்டபத்தின் வாசற் பக்கம் பார்த்தார். பார்த்த உடனே, ''ஆ! இதோ செய்தி வருகிறது'' என்றார்.

காவலன் ஒருவன் உள்ளே வந்து, சக்கரவர்த்திக்கு அடி வணங்கி, அவருடைய காதோடு ஏதோ இரகசியமாகச் சொன்னான். சாதாரணமாக எந்தச் சந்தர்ப்பத்திலும் ஆச்சரிய அறிகுறியைக் காட்டாத மகேந்திர

பல்லவரின் முகம், மேற்படி காவலன் கூறியதைக் கேட்டதும் எல்லையற்ற வியப்பைக் காட்டியது.

''சபையோர்களே! நீங்களாவது நாலாவது சற்றும் எதிர்பாராத அதிசயமான செய்தி வந்திருக்கிறது. என்னாலேயே நம்ப முடியவில்லை. விசாரித்து உண்மை தெரிந்துகொள்ளப் போகிறேன். இப்போது சபை கலையட்டும். இன்றிரவு மறுபடியும் சபை கூடவேண்டும். அப்போது எல்லாம் விவரமாகச் சொல்கிறேன். மாமல்லா! நீயும் அரண்மனைக்குப் போய் உன் தாய்மாரைப் பார்த்துவிட்டு வா!'' என்று கூறிக்கொண்டே மகேந்திர பல்லவர் எழுந்து சபா மண்டபத்தின் வாசலை அடைந்து, அங்கு ஆயத்தமாய் நின்ற குதிரையின் மீது தாவி ஏறினார்.

### எட்டாம் அத்தியாயம்

## யோக மண்டபம்

நீண்ட காலத்துக்குப் பிறகு நாம் மறுபடியும் கண்ணபிரானுடைய வீட்டுக்குள் பிரவேசிக்கும்போது, அங்கே 'குவா குவா' என்ற சத்தத்தைக் கேட்டுத் திடுக்கிடுகிறோம்.

வாசற்படியில் சிறிது தயங்கி நின்றுவிட்டு உள்ளே சென்றோமானால், அஸ்தமன வேளையின் மங்கிய வெளிச்சத்தில் அங்கே ஓர் அபூர்வமான காட்சியைக் காண்கிறோம்.

விபூதி ருத்ராட்சமணிந்து கனிந்த சிவப்பழமாய்த் தோற்றம் அளிக்கும் ஒரு சைவப் பெரியார் நிற்கிறார். அவருடைய நீட்டிய இரு கரங்களிலும் ஒரு பச்சைக் குழந்தை — ஆறு மாதத்துக் குழந்தை — காணப்படுகிறது. மூக்கும் விழியுமாக வெண்ணெய் தின்ற கண்ணனைப்போல் கிண்ணென்றிருந்த அந்தக் குழந்தைதான் 'குவா குவா' என்று அழுகிறது. அந்தச் சைவப் பெரியாருக்கு எதிரில் கண்ணபிரானும், கமலியும் நின்று புன்னகை புரிந்து கொண்டிருக்கிறார்கள்.

பெரியவர் குழந்தையைக் கமலியின் கைகளில் விட்டுவிடப் பார்க்கிறார். கமலி குழந்தையை வாங்கிக்கொள்ள மறுத்துப் பின்வாங்குகிறாள்: ''நான் என்ன செய்வேன்? பாட்டனைக் கண்டால் பேரனுக்கு அவ்வளவு ஆசை. என்னிடம் வரமாட்டேனென்கிறான்'' என்று சொல்லுகிறாள் கமலி. இதையெல்லாம் பார்த்த கண்ணபிரான் சந்தோஷப்பட்டுக் கொண்டே நிற்கிறான்.

குழந்தை 'குவா குவா' என்று கத்திக் கொண்டே காலையும் கையையும் உதைத்துக் கொள்ளுகிறது. கிழவர், ''கமலி! உன்னுடைய பொல்லாத்தனம் உன் குழந்தையிடமும் இருக்கிறது!'' என்கிறார்.

அச்சமயம், வீட்டின் கொல்லைப் புறத்திலிருந்து அதாவது அரண்மனைத் தோட்டத்திலிருந்து மணி அடிக்கும் சத்தம் கேட்கிறது. பெரியவர் அதைக் கேட்டதும் அதிக பரபரப்பை அடைகிறார். அப்பால் இப்பால் பார்க்கிறார். குழந்தையைத் திடீரென்று தரையில் விட்டு விட்டுத் தோட்டத்தைப் பார்க்க ஓட்டம் பிடிக்கிறார்.

கமலி, தன் கண்களில் தீப்பொறி பறக்க, ''பார்த்தாயா, உன் தகப்பன் சாமர்த்தியத்தை? பச்சைக் குழந்தையைத் தரையிலே போட்டு விட்டு ஓட எப்படித்தான் மனம் வந்ததோ?'' என்றாள்.

''கமலி! அப்பாவின் பேரில் குற்றம் இல்லை. நாதப்பிரம்மம் நேரிலே வந்து கூப்பிடும்போது அவர் என்ன செய்வார்?''

''நாதப்பிரம்மமும் ஆச்சு; நாசமாய்ப் போனதும் ஆச்சு! வெறும் ஆஷாடபூதி. அவ்வளவு வைராக்கிய புருஷராயிருந்தால், காட்டுக்குத் தபசு செய்யப் போவதுதானே? அரண்மனைத் தோட்டத்தில் சிங்கார மண்டபத்தில் என்ன வேலை? சமாதி கட்டிக்கொள்ள இங்கேதானா இடம் அகப்பட்டது? அது போகட்டும். என் பொல்லாத்தனமெல்லாம் என் குழந்தைக்கும் வந்திருக்கிறதாமே! கிழவரின் வாய்த்துடுக்கைப் பார்த்தாயா? இவருடைய மகன் மட்டும் ரொம்பச் சாதுவாம்! பார்! நான் போய்விடுகிறேன். என் தங்கை சிவகாமியைப் பார்க்க வேண்டும் என்று எனக்குக் கூட ஆசையாய் இருக்கிறது. கோட்டைக் கதவு திறந்ததும் இந்தப் பொல்லாத பிள்ளையையும் அழைத்துக் கொண்டு போய் விடுகிறேன்! இந்த அரண்மனைச் சிறையில் யார் இருப்பார்கள்?''

இப்படிக் கமலி மூச்சு விடாமல் பேசிக் கொண்டே தரையில் கிடந்த குழந்தையை எடுக்கப் போனாள். கண்ணனும் அதே சமயத்தில் குழந்தையை

எடுப்பதற்குக் கீழே குனிந்தான். இருவருடைய தலைகளும் மோதிக் கொண்டன. ''இந்தப் பொல்லாதவனை நீ ஒன்றும் எடுக்க வேண்டாம்!'' என்றாள் கமலி. ''அப்படித்தான் எடுப்பேன். நீ என்ன சொல்லுகிறது?'' என்றான் கண்ணன். இப்படி இவர்கள் குழந்தையைத் தரையிலிருந்து யார் எடுப்பது என்று சண்டை போட்டுக் கொண்டிருக்கும்போதே, வாசலில் குதிரைச் சத்தம் கேட்டது. சற்று நேரத்துக்கெல்லாம் யாரோ உள்ளே வந்தார்கள். யார் என்று திரும்பிப் பார்த்த கண்ணபிரானும் கமலியும் அப்படியே பார்த்தது பார்த்தபடி பிரமித்து நின்றார்கள்.

ஏனெனில், அவ்விதம் திடீரென்று வந்தவர், சாக்ஷாத் மகேந்திர பல்லவ சக்கரவர்த்திதான்.

''ஓஹோ! இங்கேயும் ஒரு யுத்தமா? நாட்டிலே யுத்தம் நின்று விடும்போல் இருக்கிறது. ஆனால் உங்கள் வீட்டு யுத்தம் மட்டும் நிற்கவே நிற்காது போலிருக்கிறதே!'' என்று சக்கரவர்த்தி கூறியதும் தம்பதிகள் இருவரும் பெரிதும் வெட்கமடைந்து மறுமொழி சொல்ல முடியாமல் நின்றார்கள்.

பிறகு, மகேந்திர பல்லவர், ''கமலி! உன் குழந்தை சௌக்கியமாய் இருக்கிறதா?'' என்று கேட்டுக்கொண்டே, அருகில் வந்து குழந்தையின் முகத்தைப் பார்த்துவிட்டு, ''கண்ணனை அப்படியே உரித்து வைத்திருக்கிறது. சின்னக் கண்ணன் என்றே பெயர் வைத்து விடலாம். மாமல்லனுக்கும் கல்யாணமாகி இந்த மாதிரி ஒரு குழந்தை பிறந்தால், அரண்மனை கலகலவென்று இருக்கும். அரண்மனையில் குழந்தை அழுகைச் சத்தம் கேட்டு வெகு காலம் ஆயிற்று!'' என்று தமக்குத் தாமே பேசிக் கொள்கிறவர் போல் சொல்லிவிட்டு, ''கண்ணா! உன் தகப்பனார் எங்கே?'' என்று கேட்டார்.

''இப்போதுதான் வசந்த மண்டபத்துக்குப் போனார் பிரபு!'' என்றான் கண்ணன்.

''ஆ! மகரிஷி யோக சாதனைக்குப் போய்விட்டாரா?'' என்று மகேந்திரர் கேட்டபோது, கமலி இலேசாகச் சிரித்தாள்.

''கமலி சிரிக்கிறாள்! உங்களைப் போல் இளம் வயதாயிருப்பவர்களுக்கு யோகம், சமாதி என்றால் சிரிப்பாகத்தான் இருக்கும். வயதாகி உலகத்தில் விரக்தி ஏற்பட்டால் அப்புறம் நீங்களும் போகும் வழிக்குக் கதி தேடலாமென்று யோசிப்பீர்கள். போகட்டும்; உங்களுடைய யுத்தத்தைத் தொடர்ந்து நடத்துங்கள். நான் யோகியைப் பார்த்து விட்டுப் போகிறேன்'' என்று சொல்லிக் கொல்லைப் பக்கம் நோக்கிச் சென்றவர், வாசற்படியண்டை சற்று நின்று, ''கமலி! உன் சிநேகிதி சிவகாமியைக் கூடிய சீக்கிரம் நீ பார்க்கலாம்!'' என்று கூறிவிட்டு மேலே நடந்தார்.

சக்கரவர்த்தி மறைந்ததும், கமலி, ''கண்ணா! இதென்ன சக்கரவர்த்தி திடீரென்று வந்து நம் மானத்தை வாங்கி விட்டார்? சிவகாமி கூடிய சீக்கிரம் வருவாள் என்று அவர் சொன்னதைக் கேட்டாயா, கண்ணா? யுத்தம் சீக்கிரத்தில் முடிந்துவிடப் போகிறதாமே? சளுக்கர்கள் தோற்று ஓடிப் போய் விட்டார்களா?'' என்று ஏதேதோ கேட்டாள்.

அந்தக் கேள்விகளையெல்லாம் காதில் வாங்கிக் கொள்ளாதவனாய்க் கண்ணபிரான் ஏதோ யோசித்துக் கொண்டிருந்தவன், சட்டென்று யோசனையை நிறுத்தி, ''கமலி! கொஞ்ச நாட்களாகவே எனக்கு ஒருமாதிரி சந்தேகம் இருந்தது. அது இன்றைக்கு ஊர்ஜிதமாயிற்று!'' என்றான்.

''என்பேரில் சந்தேகம் வந்துவிட்டதா? அது என்ன சந்தேகம்?''

''உன்பேரில் எனக்கு யாதொரு சந்தேகமும் இல்லை. சந்தேகம் என் தகப்பனார் பேரில்தான். அவர் ஏதோ யோகம், தியானம், நாதப்பிரம்ம உபாசனை என்றெல்லாம் சொல்லிக் கொண்டு நந்தவன மண்டபத்துக்குப் போய் இரவு பகலாய் உட்கார்ந்திருக்கிறாரே, அதில் ஏதோ அந்தரங்கம் இருக்க வேண்டுமென்று சந்தேகித்தேன். அந்தச் சந்தேகம் ஊர்ஜிதமாயிற்று இன்று.''

''என்ன சந்தேகம் எப்படி ஊர்ஜிதமாயிற்று?''

''கிட்ட வா, சொல்கிறேன். ரொம்ப ரொம்ப அந்தரங்கமான விஷயம். இந்தப் பயலின் காதில்கூட விழக்கூடாது. கமலி, அப்பாவின் யோக மண்டபத்தில் ஒரு சுரங்க வழி இருக்கிறது. அது கோட்டைக்கு வெளியே போகிறது. சக்கரவர்த்தியின் ஒற்றர்கள் அதன் வழியாக அடிக்கடி வந்து போய்க் கொண்டிருக்கிறார்கள் என்று நினைக்கிறேன். பார்த்தாயா? இந்தப் பயல் நான் சொல்வதை எப்படி ஒட்டுக்கேட்டுக் கொண்டிருக்கிறான்...!'' என்று கண்ணபிரான் சொல்லிக் குழந்தையின் கன்னத்தை இலேசாகக் கிள்ள, குழந்தை வீல் என்று கத்த ஆரம்பிக்க, கமலி கண்ணபிரானைச் சண்டை பிடிக்க, கண்ணபிரான், ''அவனும் என் கன்னத்தை வேண்டுமானால் கிள்ளட்டும்!'' என்று கூற, கமலி குழந்தையைப்

பார்த்து, அதற்கு முத்தம் கொடுக்கப் போக, குறுக்கே கண்ணபிரான் தன் கன்னத்தை நீட்ட, கமலி அவனைச் சண்டை பிடிக்க, இப்படி ஏகப் பூசலாகிவிட்டது.

* * *

இதற்கிடையில் மகேந்திர சக்கரவர்த்தி அரண்மனைத் தோட்டத்துக்குள் புகுந்து வசந்த மண்டபத்துக்குச் சென்றார். காலடிச் சத்தத்தைக் கேட்டதும், சிவனடியாராக விளங்கிய அகவபாலர் வெளியில் தலைநீட்டி, ''பிரபு! தாங்கள்தானே? நல்ல சமயத்தில் வந்தீர்கள். இப்போதுதான் மணி அடித்தது!'' என்று கூறி, மண்டபத்தின் நடுமத்தியில் இருந்த சிவலிங்கத்தை அப்பால் நகர்த்தவும், சிவலிங்கம் இருந்த இடத்தில் ஒரு பள்ளமும், அதற்குள் மங்கிய இலேசான வெளிச்சமும் தெரிந்தன. சில விநாடிகளுக்கெல்லாம் அந்தப் பள்ளத்திலிருந்து சத்ருக்னனுடைய தலை எழுந்தது. பிறகு சத்ருக்னனின் முழு உருவமும் வெளியில் வந்தது.

'' சத்ருக்னா! உனக்காகக் காத்திருந்து காத்திருந்து போதும் என்று ஆகிவிட்டது. ஏன் இவ்வளவு தாமதம்? போன காரியம் என்ன? காயா? பழமா?'' என்று மகேந்திர பல்லவர் கேட்டார்.

''பல்லவேந்திரர் எடுத்த காரியம் ஏதாவது காயாவது உண்டா? பழந்தான், சுவாமி! எல்லாம் தாங்கள் போட்ட திட்டப்படியே நடந்தது. வேங்கித் தூதனுடன் போன சளுக்க வீரர்களிடம் குண்டோதரன் அகப்பட்டுக்கொண்டான். இருவரும் கொள்ளிடக் கரையில் புலிகேசியின் முன்னிலைக்குக் கொண்டு போகப்பட்டார்கள்.''

''குண்டோதரனை அப்புறம் பார்த்தாயா? அல்லது அவனிடமிருந்து ஏதேனும் செய்தி உண்டா?''

''அதுதான் இல்லை. அவனுக்காகத்தான் இத்தனை நேரம் காத்துப் பார்த்தேன். புலிகேசி மகா மூர்க்கன் என்று கேள்வியாச்சே, சுவாமி! குண்டோதரனுடைய கதி என்ன ஆயிற்றோ என்று சிறிது கவலையாக இருக்கிறது.''

''குண்டோதரனுக்கு ஒன்றும் நேர்ந்திராது, சத்ருக்னா!''

''எப்படிச் சொல்கிறீர்கள் பிரபு?''

''நம்முடைய யுக்தி நாம் எதிர்பார்த்ததைக் காட்டிலும் மகத்தான பலனை அளித்து விட்டது. கேள், சத்ருக்னா! புலிகேசி சமாதானத் தூது அனுப்பியிருக்கிறான்! இந்த நேரம் அவனுடைய தூதர்கள் என் மறுமொழிக்காகத் தெற்குக் கோட்டை வாசலில் காத்திருக்கிறார்கள். நான் உன்னைச் சந்தித்துவிட்டுப் பிறகு முடிவாக மறுமொழி சொல்லலாம் என்று எண்ணி அவசரமாக இங்கே வந்தேன்.''

''பிரபு! புலிகேசியை நம்பலாமா ? மகா வஞ்சகன் என்று சொல்லுகிறீர்களே?'' என்றான் சத்ருக்னன்.

'' அவநம்பிக்கை கொள்ளுவதற்கு இடமேயில்லை, சத்ருக்னா! ஆனாலும் குண்டோதரன் திரும்பி வந்தால் அவனைச் சில விஷயங்கள் கேட்டு உறுதிப்படுத்திக்கொள்ளலாம் என்று நினைத்தேன்.''

இவ்விதம் மகேந்திரர் சொல்லிக் கொண்டிருந்த போதே சத்ருக்னன் எந்தப் பள்ளத்திலேயிருந்து வெளி வந்தானோ, அந்தப் பள்ளத்துக்குள் இ[illegible] சத்தம் கேட்டது. பேசிக்



கொண்டிருந்த இருவரும் திடுக்கிட்டார்கள். அடுத்த விநாடி அந்தப் பள்ளத்தில் குண்டோதரனுடைய தலை தெரியவே, அளவிறந்த வியப்போடு ஓரளவு அமைதியும் அடைந்தார்கள்.

''குண்டோதரா! உனக்கு நூறு ஆயுசு. இப்போதுதான் உன்னைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். நீ எப்படித் திடீரென்று முளைத்தாய்?'' என்று சக்கரவர்த்தி கேட்க, ''பிரபு! தாங்கள் அடிக்கடி 'சத்ருக்னரைப் பின்பற்றி நட! சத்ருக்னரைப் பின்பற்றி நட!' என்று சொல்லுவீர்களே; அது மிக மிகக் கடினமான காரியம். இந்த இருட்டுச் சுரங்க வழியில் இவரைப் பின்பற்ற முயன்று நான் ஓடோடி வந்தும் இவரைப் பிடிக்க முடியவில்லை!'' என்றான் குண்டோதரன்.

''உன் வேடிக்கையெல்லாம் அப்புறம் ஆகட்டும். நீ போன இடத்தில் என்ன நடந்தது என்று விவரமாகச் சொல்லு'' என்று மகேந்திர சக்கரவர்த்தி கேட்க, குண்டோதரனும் நாம் முன்னமே அறிந்த வரலாற்றை விவரமாகக் கூறி முடித்தான். (தொடரும்)

அபிஷேக ஆராதனைகளை முடித்துக் கொண்டு கோயிலுக்கு வெளியே உள்ள திண்ணையில் வந்து உட்கார்ந்தார் சுந்தரேச குருக்கள். அன்று காலை முதல் சோதனையாக ஒருவர்கூடக் கோயிலுக்கு வரவில்லை. எடுபிடி வேலைகளைச் செய்யும் அருணாசலம்கூடத் தன் உறவினன் ஒருவனுக்கு 'உடல்நலம் சரியாக இல்லை' என்று சென்னைக்குப் போனவன், தான் திரும்ப இன்னும் ஒரு வாரம் ஆகும் என்று ஒரு நண்பன் மூலம் போஸ்ட்மாஸ்டருக்கு எழுதியிருந்தான். இதோடு மூன்று தடவை 'ஒரு வாரம்' முடிந்து விட்டது. அருணாசலம்தான் வரவில்லை.

திண்ணையை அடுத்தாற்போலுள்ள சற்று அகலமான வாயிற்படியில் சிதம்பரப் பண்டாரம் உட்கார்ந்திருந்தார். அவர் முன்னால் விரித்திருந்த துண்டில் சில சில்லறை நாணயங்கள் கிடந்தன. பக்கத்தில் ஒரு பையுடன் திருவோடு. அடுத்தாற்போல் சுவரின் பக்கமாகக் கையிலே இடுக்கிக்கொள்ள ஒரு தடி. பொழுது போகாத நேரத்தில் குருக்கள் பண்டாரத்திடம்தான் பேசிக் கொண்டிருப்பார். மனித வாடையே அண்டாத அந்த ஏகாந்த பிரதேசத்தில் பேச்சுத் துணைக்குப் பண்டாரம்தான். பின் உள்ளே இருக்கும் ஆண்டவனா பேசப் போகிறார்? அப்போதைய நிலையில் அந்தஸ்து வித்தியாசம் எப்படி இருக்கும்? மேலும் சிதம்பரப் பண்டாரம் எடுப்பது பிச்சையானாலுங்கூட வேதாந்தபரமாகப் பேசுவார். நல்ல விஷய ஞானம் உள்ளவர். பூர்வாசிரமத்தில் கொஞ்சம் வசதியாக இருந்த காலத்தில் பெற்றுக் கொண்ட சங்கீத ஞானமும் அவ்வப்போது பேச்சின் நடுவே இழையோடும்.

ஏதோ ஒரு விபத்தில் தன் இரு முழங்கைகளையும் இழந்துவிட்ட சிதம்பரப் பண்டாரத்துக்கு எல்லா மதமும் சம்மதம்தான். வெள்ளிக்கிழமை என்றால் பக்கத்து ஊரில் உள்ள தர்க்கா பக்கத்தில் போய் உட்கார்ந்து விடுவார். ஞாயிற்றுக்கிழமை மாதாகோயிலுக்குப் போய்விடுவார். மற்றக் கிழமைகளில் அவருக்குச் சிவன் கோயிலும் சுந்தரேச குருக்களும்தான் கதி.

'என்ன பண்டாரம், இன்றைக்குக் கோயிலுக்கு யாரும் வரவில்லை. உம்முடைய துண்டில் மட்டும் சில்லறை கிடக்கிறது.



இட்டத்தட்ட ரூபாய் தேறும்போல் இருக்கிறதே. யாரும் கோவிலுக்கு வராமல் நேராக உமக்கு மட்டும் தர்மம் செஞ்சுட்டுப் போயிட்டாளா என்ன?'

சிவபுராணத்தை முணுமுணுத்துக் கொண்டு உட்கார்ந்திருந்த பண்டாரம், ''அதைக் கேட்கிறீங்களா, சாமி?'' என்று கேட்டுவிட்டுச் சிரித்தபடியே குருக்களின் பக்கமாக வசதியாகத் தம் உடலை நிமிர்த்தி உட்கார்ந்து கொண்டார். அப்படித் திரும்புவதற்குள் வாய் சிவபுராணத்தில் ஓர் அடியை முணுமுணுத்துவிட்டது.

'' அவனருளாலே அவன் தாள்வணங்கி....''

''சாமி! அவனே வணங்கறதுக்கும் அவன் அருள் வேணும். நமக்குக் கிடைப்பதற்கும் அவன் அருள் வேணும். ஸ்வதர்மம்னு ஒன்னு இருக்கு பாருங்கோ. வெறும் துண்டை விரிக்கக் கூடாது. அதனாலே நானே கொஞ்சம் சில்லறையாகப் போட்டு வைச்சுடுவேன். அப்புறம் சில பேருக்கு மனசு இருந்தாலும் சில்லறையாக இல்லையேன்னு வருத்தப்படுவாங்க. அதனாலே சில்லறை கொஞ்சம் போட்டு வைச்சா ரெண்டுக்கும் சரியாப் போயிடுது பாருங்க. உள்ளே சாமி காரியம் எல்லாம் முடிஞ்சுட்டுதா ?''

''எல்லாம் முடிஞ்சுடுத்து பண்டாரம். ஆனால் சோதனையாக இன்று ஒருத்தருமே வரலியே, பண்டாரம் !''

''இன்னிக்கும் பக்கத்து ஊரிலே தேர் இல்லையா, சாமி ! எல்லோரும் அங்கே போயிருப்பாங்க.''

''நீங்க போகலையா பண்டாரம் ?''

''அதுதான் சாமி, முன்னாலேயே சொன்னேனே. அவனே வணங்கவும் அவன் அருள் வேணுமே. உடம்பு இடம் கொடுக்க வேணுமா ? ஏதோ கடவுள் கொடுத்த உடம்பை அழிக்கக் கொள்ளக்கூடாதே என்று பார்க்கிறேன். இல்லென்னு இதனால் என்ன உபயோகம் சொல்லுங்க?''

''அப்படிச் சொல்லாதீங்க, பண்டாரம்! கடவுள் ஒவ்வொருத்தரையும் ஒரு காரியத்துக்காகத்தான் படைச்சிருப்பான்.''

''என்னவோ சாமி, அந்த ஆண்டவனைத் தொழ என் கைகளைக் கூப்பக்கூட முடியாது.

## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் ரூ.250 பெறும் மூன்றாவது பரிசுக் கதை



ஒருகாலத்தில் எப்போதும் அவனைத் தொழுது கொண்டே இருந்தேன். அப்போது மனத்தில் ஈடுபாடு இல்லை. இப்போது மனம் அவனிடம் ஒன்றிக் கிடக்கிறது. கைகள் அண்டமாட்டேன் என்கிறது.''

சுந்தரேசக் குருக்களுக்குச் 'சுருக்'கென்றது. ஒரு வேளை தான் இதயபூர்வமாக வழிபடாததைச் சொல்லிக் காண்பிக்கிறாரோ என்று தோன்றியது. இறைவனை வழிபடும் போது சில சமயம் அவர் சொந்தக் கவலையில் லயித்துவிடுவதும் உண்டு. இருந்தாலும் சமாளித்தவராக, ''அது எப்படிச் சொல்ல முடியும்? மனித மனம் சஞ்சலம் அடைகிறது என்றால், அதற்கான காரணத்தை உருவாக்குபவனும் அவன்தானே! அவன் ஆட்டி வைத்தபடிதானே நாம் ஆகிவிடுகிறோம்? இதோ, என் நிலைமையை எடுத்துக் கொள்ளுங்களேன். வீட்டிலே பைசா கிடையாது. மானியமாய் வந்த நெல்லில் பாதி கருக்காய். மட்டமான நெல்லைத்தானே கோயிலுக்கு அளக்கிறார்கள்? என்ன செய்யறது? அம்புஜுவுக்கு இந்த வருஷமாவது கல்யாணம் பண்ணணும்னு வீட்டிலே தொந்தரவு பண்றா. வயசும் அப்படி இப்படி இருபத்தெட்டைத் தாண்டியாயிடுத்து. படிப்பும் இல்லை. அழகைப் பார்க்கணும்னா நான் கோயில் விக்கிரகத்தில் உள்ள அழகைத்தான் பார்க்கணும்'' என்றார். தொடர்ந்து பெருமூச்சு விட்டவாறே, ''இந்தக் காலத்திலே பையன்கள் எல்லாம் பெண் அழகாகவும் இருக்கணும், படிச்சும் இருக்கணும், கைநிறையச் சம்பாதிக்கவும் செய்யணும் என்கிறார்கள்'' என்று கூறினார். அவர் குரல் நைந்து முடிந்தது.

''அப்பத்தான் சாமி அவன் ஏதாவது வேலைநிறுத்தத்திலே கலந்துகிட்டாலும் அவள் சம்பளத்திலே குடும்பத்தைத் தாட்ட முடியும். முன்னெல்லாம் தாயார்தான் குழந்தைகளைப் பொறுப்போடு நடந்து கொள்ளச் சொல்லுவா. இப்போ நாட்டுக்காக மனைவி கணவனைப் பொறுப்போடு வேலை செய்யுங்கன்னு சொல்லணும்போல இருக்கு.''

எப்பேர்ப்பட்ட அரசியல் உண்மையை எவ்வளவு அலட்சியமாக அலசி விட்டார் என்று குருக்களுக்குத் தோன்றியது.

அப்போது கோயில் வாசலில் ஒரு பெரிய கப்பல் போன்ற கார் வந்து நின்றது. அதிலிருந்து ஒரு நபர் பாதி இறங்கியும், இறங்காமலும் கதவருகில் நின்று கொண்டே, ''இது தானே, பொற்சோதி கோயில்?'' என்று குருக்களிடம் விசாரித்தார்.

''ஆமாம், இதுதான் 'செம்பொற்சோதி கோயில்'. பெரியவர்கள் அந்தக் காலத்தில் வைத்த பெயர் இப்போது பொற்சோதி என்றாகிவிட்டது.''

காரைவிட்டு நன்றாக அவர் கீழே இறங்கவே, எல்லோரும் இறங்கினார்கள். அதில் ஒருவர் போகும்போது ஒரு ரூபாய் நோட்டைப் பண்டாரத்தின் துணியில் போட்டு விட்டுக் குனிய முடியாமல் குனிந்து சில்லறையைப் பொறுக்கி எடுத்துக் கொண்டார். பக்கத்து டவுனில் சில்லறைப் பஞ்சம் என்றும், ரூபாய்க்குப் பத்து பைசா கமிஷன் என்பதால் தான் பண்டாரத்துக்குப் பணம் போட்டதில் ஐந்து பைசா தர்மமும், தமக்கு ஐந்து பைசா லாபமும் என்று ஆங்கிலத்தில் பெருமைப் பட்டுக் கொண்டார். குருக்கள், அவர்களிடம் கோயிலின் பெருமையைச் சொல்லிக் கொண்டே போனார்.

''நாங்கள் ஆராய்ச்சியாளர்கள். இந்தக் கோயிலில் உள்ள உற்சவர் நிஜமாகவே செம்பொன்னால் செய்யப்பட்டவர் என்றும், அபூர்வமான வேலைப்பாடு அமைந்த விக்கிரகம் என்றும் கேள்விப்பட்டோம். அதைப் பற்றியும், இந்தக் கோயிலிலுள்ள சில கல்வெட்டுக்களைப் பற்றியும் ஆராய வேண்டும்'' என்றெல்லாம் கூறினார்கள். குருக்கள் தீபாராதனை எடுத்துக் காட்டினார். தட்டில் முழுப் பத்து ரூபாய் நோட்டு விழுந்தது. குருக்களுக்குத் தலையைச் சுற்றியது. சட்டென்று அருகில் இருந்த தூணைப் பிடித்துக் கொண்டு, ''சில்லறை இல்லையே!'' என்றார்.

சற்று முன்னால் அவர்கள் ஐந்து பைசா கமிஷனைப் பற்றிச் சந்தோஷப்பட்டுக் கொண்டதைக் குருக்கள் தமக்கிருந்த அரைகுறை ஆங்கில அறிவினால் நன்றாகப் புரிந்து கொண்டிருந்தார்.

''சில்லறை யார் கேட்டார்கள்? ஏதோ உங்களுக்குப் போட்டால் இறைவனிடம் நேரில் கொடுத்த ஒரு திருப்தி. பக்கத்திலே ஏதாவது நல்ல ஹோட்டல் இருந்தால் சொல்லுங்கள். காப்பி வேண்டும். காரில் பெட்ரோல் இருக்கிறதோ, இல்லையோ, இந்த உடம்புக்குப் பெட்ரோல் போட்டால்தான் ஓடும்'' என்று பழைய துணுக்கைக் கூறி வெகுவாகத்தாமே ரசித்துச் சிரித்தார். பணக்காரர் உதிர்த்த ஹாஸ்யம் இல்லையா, கூட வந்தவர்கள் சிரித்தார்கள். குருக்களும் சிரித்து வைத்தார், தம் பங்குக்குக் குறைவில்லாமல்!

''ஹோட்டல் கிடையாது. உங்களுக்கு ஆட்சேபனை இல்லைன்னா என் வீட்டிலே இருந்தே கொண்டு வரேன்'' என்றார் குருக்கள். 'முழுதாகப் பத்து ரூபாய் தட்டில் அப்படியே இருக்கிறதே! அதை வீட்டில் கொண்டு போய் முதலில் கொடுக்க வேண்டும் என்ற பேராவல். அதோடு கடமைப்பட்டிருக்கிறோம்' என்ற உணர்வு.

''ரொம்ப நல்லதாகப் போயிற்று. ஆனால் நாங்களே அங்கே வந்து சாப்பிட்டுவிட்டு அப்படியே போயிடறோம். உங்க வீட்டையும் பார்த்து வைத்துக் கொண்டாற் போல் ஆச்சு. நீங்களும் எங்ககூட வரலாம் இல்லையா?''

''அதனால் என்ன, இதோ ஒரு நொடியில் கோயில் கதவை மூடிவிட்டு வருகிறேன்.''

*  *  *

''உலகெங்கிலும் உள்ள தேவாலயங்கள் தோறும் விளங்கும் பெருமானே!''

அருணகிரிநாதரின் க்ஷேத்திரக் கோவை திருப்புகழை முடித்துக் கொண்டிருந்தார் பண்டாரம்.

''அதென்னவோ வாஸ்தவம் ஐயா! நம்ம சாமிக்கு உலகமெல்லாம் நல்ல டிமாண்ட்'' என்றார் வந்தவர்களில் ஒருவர். மற்றவர்கள் அதை அவ்வளவாக விரும்ப வில்லைபோல் தோன்றியது.

# சிங்கப்பூருக்கும், அதற்கப்பாலும் சென்றிட

# சிறப்பான ஸர்விஸ்

வியாழன் அல்லது ஞாயிறு தோறும் பகல் 12-45 மணிக்கு
சென்னையிலிருந்து புறப்பாடு. மாலை 6-35 மணிக்கு சிங்கப்பூர். இடை நிற்காது
தொடர்ந்து அங்கிருந்து சிட்னி, மெல்போர்ன். வியாழக் கிழமைகளிலே
மேலும் தொடர்ந்து பெர்த் சேரும்.

சுகபோக வசதிகளோடு உமக்கென்றே பறக்கிறது நாங்கள் போயிங்
ஸூப்பர் ஜெட் ஸர்விஸ். விமானப் பயணத்தின்போது விசேஷமான பணிவிடை—
இதர ஏர்லைன்களையும் வியக்க வைத்திடும் உபசரிப்பு அது. இப்போதே
பாருங்கள் உங்கள் பிரயாண ஏஜெண்டை, அல்லது எஸ்ஐஏ.

கோலாலம்பூருக்கும் எஸ்ஐஏ இணைப்புக்கள் உடனுக்குடன் உண்டு.

வசதியான எஸ்ஐஏ இணைப்புக்கள் இந் நகரங்களுக்கும் உள்ளன:
பேங்காக், ஹாங் காங், டேய்பேய், டோக்கியோ,
ஓஸாகா, ஜகார்ட்டா.

**சிங்கப்பூர் ஏர்லைன்ஸ்**



வான் வீதியிலே உமக்கோர் சிங்காதனம்

எஸ்ஐஏ, நரிமன் பாயிண்ட், பம்பாய்-400 021. போன்: 259951. டெலெக்ஸ்: 011—3887.
எஸ்ஐஏ, 36D, மவுண்ட் ரோடு, சென்னை-600 002. போன்: 811759, 83917, 83849. டெலெக்ஸ்: MS 7278.

1378 TM

தாம் காரில் செல்லப் போவதை யாரிடமாவது சொல்லிப் பெருமைப்பட்டுக் கொள்ள நினைத்தவர் போல் குருக்கள் சொன்னார்: "பண்டாரம், இதோ வீடு வரையில் போயிட்டு வந்துடறேன். கொஞ்சம் பார்த்துக் கொள்ளுங்கள்."

சாவியை இடுப்பில் செருகிக் கொண்டே கார் அருகில் வந்தார் குருக்கள்.

"சாமிக்குப் பண்டாரம் காவலா?" என்று கூறி ஹாஸ்யமாகச் சிரித்தார் காரை ஓட்டிவந்த பெரிய மனிதர்.

"அதென்னவோ உண்மை தான்! இரவு நேரங்களில் கோயில் திண்ணையில் பண்டாரம் தான் படுத்துக் கொள்வார். வெள்ளிக்கிழமை, ஞாயிற்றுக்கிழமை பகல் வேளைகள் தவிர மற்ற எல்லாச் சமயங்களிலும் அவர் இங்கேயேதான் இருப்பார். அந்த இரண்டு நாட்களில் மட்டும் பக்கத்து டவுனில் இருக்கும் தர்க்காவுக்கும், மாதா கோயிலுக்கும் போய் விடுவார்."



" கார்ப்பரேஷன் ஊழல் விவகாரத்தில் தலைமறைவான என் கணவரின் போட்டோதான் இது !"

குருக்களுக்கு ரொம்ப வருத்தம். தம் வீட்டு வாசலில் தம் வீட்டார் யாரும் வந்து நிற்காதது. வந்திருந்தால் அவர் காரிலிருந்து இறங்கியதைப் பார்த்திருக்கலாம். 'தரித்திரங்கள்! எல்லாவற்றுக்கும் கொடுத்து வைத்திருக்க வேண்டாமா?' என்று மனம் அங்கலாய்த்தது. காப்பி குடித்துவிட்டு அவர்கள் போய்விட்டார்கள்.

அதன் பிறகு கொஞ்ச நாட்கள் காரில் வந்தவர்களுடன் போய் வந்து கொண்டிருந்தார். குருக்களின் மனைவி, பெண் நல்ல புடவைகளை உடுத்தலானார்கள். ஒன்றிரண்டு நகைகள்கூட உடம்பில் ஏறின. 'அம்புஜங்கூட அழகா இருக்காளோ?' என்று குருக்களுக்குச் சந்தேகம் தட்டியது. 'என்ன, ஏது' என்று கேட்டவர்களுக்கு 'அந்த ஆராய்ச்சியாளர்கள் மூலம் பெரிய இடத்துச் சிநேகிதம் கிடைத்திருக்கிறது. பெரிய இடங்களுக்கெல்லாம் போய்ச் சோதிடம் சொல்கிறார். சாந்தி, ஹோமம் என்று பெரிய இடங்களில் செய்யும் காரியங்களில் நல்ல வருமானம்' என்று பேசிக் கொண்டார்கள். வம்புக்கு வரம்பேது?

ஆனால் எவ்வளவுக்கெவ்வளவு வெளியில் கருகருப்பாகக் குருக்கள் நடமாடினாரோ, அவ்வளவுக்கவ்வளவு உள்ளத்தில் எரிமலையாகக் குமைந்து கொண்டிருந்தார். காரணம் அந்த ஆராய்ச்சியாளர்கள்தாம். உண்மையில் அவர்கள் ஆராய்ச்சியாளர்களே அல்ல. கோயில் சிலைகளை வெளிநாடுகளுக்குக் கடத்திச் செல்லும் கும்பலைச் சேர்ந்தவர்கள். இல்லாத கொடுமை குருக்களைப் பண ஆசைக்கு அடிமையாக்கிவிட்டது.

*　　　*　　　*

ஒரு வெள்ளிக்கிழமை பகலில், யாரும் இல்லாத வேளையில் அவர்கள் 'செம்பொற்சோதியை' எடுத்துக் கொண்டு போய்விடுவார்கள். வெள்ளிக்கிழமை இரவு தர்க்காவிலிருந்துபண்டாரம் திரும்பி வருவார். அடுத்த நாள் காலையில் குருக்கள் பூட்டு உடைக்கப் பட்டிருப்பதாக அலற வேண்டும். அதற்கேற்றவாறே முதல் நாள் இரவே உடைந்தபூட்டைத் தொங்க விட்டுப் போய் விட வேண்டும். மறக்காமல் ஈரத் துணியால் பூட்டை நன்றாகத் துடைத்துவிட வேண்டும். அப்போதுதான் எவ்வித ரேகையும் தெரியாது. மறுநாள் காலை போலீஸ் வந்தால் பண்டாரத்தைத் தான் சந்தேகப்படுவார்கள். குருக்களும் பண்டாரம், தர்கா, மாதாகோயில் என்றெல்லாம் போவார் என்றும், சில வெளிநாட்டுக்காரர்கள்கூடத் தமக்கு நிறைய தர்மம் செய்ததாகப் பெருமைப் பட்டுக் கொண்டார் என்றும் சொல்ல வேண்டும். இது சந்தேகத்தை ஊர்ஜிதம் செய்துவிடும். பண்டாரம் கைது செய்யப்படுவார். கொஞ்ச நாட்கள் கழித்து, விசாரணை எல்லாம் முடிந்தபின், செம்பொற்சோதி போனபின் தமக்கு அங்கு வேலை செய்யப் பிடிக்கவில்லை என்று சென்னையிலுள்ள தம் உறவினர்களிடம் போவதாகவும் சொல்லிப் போய்விட வேண்டும். இதுதான் திட்டம்.

குறிப்பிட்ட வெள்ளிக்கிழமை காலை. காலையிலிருந்தே ஒன்றும் பிடிபடாமல் தவித்தார் குருக்கள். பண்டாரத்தை ஒரு வாரமாகக் காணோம். "போன ஞாயிற்றுக்கிழமை காலையில் கோயிலுக்குப் போகும்போது பார்த்தேனே!" என்றார் போஸ்ட்மாஸ்டர் வில்லியம்ஸ். மழை வேறு காலை முதல் நசநசத்தது. அன்று காலை போஸ்டாபீஸ் வழியே குருக்கள் வந்து கொண்டிருந்த பொழுது போஸ்ட்மாஸ்டர் வில்லியம்ஸ் பேப்பரைக் கையில் எடுத்துக் கொண்டு செய்திகளை விமரிசனம் செய்து கொண்டிருந்தார் பலமாக.

"இந்த மாதிரி சிலைகளைத் திருடுபவர்களுக்கு மரண தண்டனைதான் கொடுக்க வேண்டும். இறைவனையே திருட எவ்வளவு நெஞ்சுரம் இருக்க வேண்டும். அதோடு வெளிநாட்டில் நம் மானத்தையும் அல்லவா பணயம் வைக்கிறார்கள்?"

சுந்தரேசக் குருக்கள் ஓலைக் குடையை எடுத்துக் கொண்டு வந்ததால், அவர் முகத்தை அவர்கள் பார்க்க முடியவில்லை. இல்லாவிட்டால் அவ்வளவு மழையிலும், சுந்தரேசக் குருக்களுக்கு ஏன் அப்படி வியர்த்துக் கொட்ட வேண்டும் என்று ஆச்சரியப் பட்டிருப்பார்கள். ஒருவேளை பிடிபட்டவர்கள் தனக்குத் தெரிந்தவர்கள்தானோ? அப்படியிருந்தால் அவர்கள் கோபத்தில் தாம் லஞ்சம் வாங்கியிருப்பதையும் உடைத்து விட்டு விடுவார்களோ? தரை வழுக்கியது. சேற்றின் காரணமாக. ஏற்கனவே வழுக்கி விழுந்தாகிவிட்டது. இது வேறு? அப்படிப்

பிடிபட்டவர்கள் அவர்கள் இல்லையென்றால் அன்று மதியம் வந்துவிடுவார்கள். செம்பொற்சோதியை எடுத்துக் கொண்டு போய் விடுவார்கள். அட்வான்ஸ் பணம் வாங்கியாகிவிட்டது. யார் பேரில் பழியைப் போட முடியும்? பண்டாரத்தை ஒரு வாரமாகக் காணவில்லை என்று எல்லோருக்கும் தெரியும். சரி, கண்டிப்பாகக் காராக்கிரஹவாசம் அனுபவிக்க வேண்டியது தான். கர்ப்பக்கிரஹத்தில் வேலை செய்தவருக்குக் காராக்கிரஹமா? வார்த்தையில் ஏதோ லயம் தட்டுவதைக் கண்டு புன்னகை கொஞ்சம் இழையோடியது. நேரம் பாம்பின் விஷமாக ஏறிக் கொண்டே போயிற்று. வேண்டாத தெய்வம் பாக்கி இல்லை. ஆனால் தெய்வம் துணை வருமோ, தம்முடைய பாதகத்துக்கு?

மழை வலுத்தது. தூரத்தில் யாரோ குடையுடன் வருவது போல் தோன்றியது. நல்ல வேளை, சிவப்புத் தொப்பியில்லை! வெள்ளை உடையில் சிவப்பு நாடாவுடன் வருவது ஒரு பாதிரியார்தான். ஒரு வேளை பண்டாரம் அடிக்கடி போகும் மாதாகோயில் பாதிரியாராக' இருப்பாரோ?

''தாங்கள்தான் சுந்தரேசக் குருக்களா? நான் பக்கத்து டவுனில் உள்ள மாதா கோயிலில் பணியாற்றுகிறேன். என் பெயர் தேவசகாயம்.''

''நான்தான் சுந்தரேசன். வாருங்கள். வெளியே மழை பெய்கிறது. உள்ளே வாருங்கள். மழையில் நிற்க வேண்டாம்.''

'':இருக்கட்டும். நான் இப்படியே நிற்கிறேன். எதற்குத் தங்களுக்குச் சிரமம்?!'' என்று பாதிரியார் கூறினாலும் மழையின் சாரல் அவர் உடலை நடுங்க வைத்தது. மூப்பின் காரணமாகக் களைப்பு வேறு. கோயிலுக்குள் எப்படி நுழைவது என்ற தயக்கம்.

''பரவாயில்லை. உள்ளே வாருங்கள். நாம் இருவரும் ஆண்டவனின் பணியில் ஈடுபட்டவர்கள்தாம். 'மழை எப்படி எங்கு பெய்தாலும் கடைசியில் கடலில்தான் சங்கமமாகிறது' என்று எங்கள்வேதம்சொல்கிறது.''

குருக்களுக்கே ஆச்சரியம். தாம் இப்படிச் சாமர்த்தியமாகப் பேசுகிறோமே என்று ஒருவேளை கடத்தல்காரர்கள் வரவில்லை என்ற தெம்போ?

''பண்டாரத்தைத் தேடி வந்தீர்களோ? அவரை ஒரு வாரமாகக் காணோம்?''

''இல்லை.... பண்டாரம் தேட முடியாத இடத்துக்குப் போய் விட்டார். போன ஞாயிற்றுக்கிழமை மாதா கோயில் வாசலில் பிற்பகலில் கூட்டம் கூடி நிற்கவே, வெளியே வந்து பார்த்தேன். பண்டாரம்தான் இறந்து கிடந்தார். திடீரென்று 'மார்பில் வலிக்கிறது' என்றாராம். தண்ணீர் கொடுப்பதற்குள் உயிர் பிரிந்துவிட்டது. பக்கத்தில் உள்ளவர்கள் கொடுத்த தகவலின் பேரில் இந்து அநாதை சவ அடக்கத்தினர் வந்து அவர் உடலை எடுத்துப் போய் விட்டார்கள்.''

சுந்தரேசக் குருக்கள் ஸ்தம்பித்து நின்றார்.

''என்னிடம் கிட்டத்தட்ட மூவாயிரம் ரூபாய் வரை பண்டாரம் கொடுத்து வைத்திருந்தார். ஏதாவது பாங்கியில் போடுவது தானே என்று அவரைக் கேட்டேன். நானே வேதனைப்படும்படி ஆயிற்று. அவர் என்ன சொன்னார் தெரியுமா?

'' 'இரண்டு கைகளையும் இழந்துவிட்ட என்னால் எப்படிக் கையெழுத்துப் போட முடியும் ஐயா? மேலும் தேடிக் கிடைக்க மாட்டாத செல்வத்தை, அந்த இறைவனையே உங்களிடம்ஒப்படைத்திருக்கிறோமே, அதைவிடவா உம்மிடம் நான் ஒப்படைத்திருக்கும் பணம் சிறந்தது?' என்றார்.''

சுந்தரேச குருக்களுக்கு வெட்கமாக இருந்தது. தேடிக் கிடைக்க மாட்டாத செம்பொற்சோதியைக் கடத்துவதற்குத் தாம் ஒரு காரணமாக இருப்பதை நினைத்து நடுங்கினார். அந்தப் பணத்தை என்ன செய்தார் என்று கேட்க நினைத்தார். அதற்குள் பாதிரியாரே சொன்னார்: ''இந்தப் பணத்தை உங்களிடம் கொடுக்கச் சொன்னார். தங்களை ஒரு சகோதரன் போல் பாவித்து வந்ததாகவும் தங்கள் மகளின் திருமணத்துக்கு இதைப்பயன்படுத்திக் கொள்ள வேண்டும் என்று தாம் விரும்புவதாகவும் தம் கடைசி ஆசையை எப்படியும் நிறைவேற்றி வைக்க வேண்டியது என் பொறுப்பு என்றும் சொல்லியிருந்தார்.''—பாதிரியார் கண்கள் நீரில் மிதந்தன.

சுந்தரேசக் குருக்கள் மௌனமாக இருந்தார்.

'' 'இதை ஏற்க மறுத்தால் என்ன செய்வது?' என்று நான் கேட்டேன். 'ஏன் பிச்சைக்காரன் கொடுத்த பணத்தை வேண்டாம் என்று சொல்லிவிடுவார் என்று பார்க்கிறீர்களா? எங்கள் ஈசனே ஒரு பிச்சாண்டிதான், ஐயா! அவனே ஒரு பண்டாரம் தான். அதனால் சகோதரனைப்போல் பாவித்து நடத்தி வந்த குருக்கள் இதை ஏற்றுக் கொள்வார் என்ற நம்பிக்கை எனக்குண்டு' என்று பண்டாரம் சொன்னார்....'' என்றார் பாதிரியார்.

சுந்தரேசக் குருக்களுக்கு என்ன சொல்வது, என்ன செய்வது என்றே புரியவில்லை. பாதிரியார் தம் கையில் கொடுத்த பையை வாங்கினவர் அவர் கையைப் பிடித்துக்கொண்டு விட்டார். அப்போது பாதிரியாரின் உருவத்தில் அவர் பண்டாரத்தைப் பார்த்தாரா? அல்லது பண்டாரமாய் வந்த அந்தப் 'பிச்சாண்டி'யைப் பார்த்தாரா என்று தெரியவில்லை. செம்மண்ணைக் கலக்கிக் கொண்டு மழைத் தண்ணீர் ஆறாக ஓடியது. அவருக்குச் 'செம்பொற்சோதி'யின் நினைவைக் கிளறிவிட்டது.

---



**பெயர் மாற்றுவோர் கவனத்துக்கு அல்ல!**

பார்க் டவுனின் பழைய பெயர் நரிமேடு!

**அரிசி விற்கிற விலையில்....!**

மயில் சிறிது ஏலக்காயும் சுக்கும் இடித்துப் போட்டுப் பால் கலந்து சாப்பிட்டால் நல்ல பசி எடுக்கும்!

கே. வேங்கடராமன்



நேற்றுவரை குழந்தைகளுக்குக் கிட்டாதது

# இன்று உங்கள் குழந்தைக்கு—

புதிய

# டெண்டெர் கேர்




## பேபி பவுடர் மென்மையான சருமத்திற்கென சரியாக பஃப்பர் செய்யப்பட்டது

உங்கள் குழந்தைக்கு அன்பும், ஆதரவும்— டெண்டெர் கேர் !

மென்மையான சருமத்திற்கென சரியாக பஃப்பர் செய்யப்பட்டது. உங்கள் அன்பும், ஆதரவும்தான் உங்கள் குழந்தைக்குக் கிட்டும் பெரும் பேறு.' எதிலுமே மிகச் சிறந்தவற்றைத்தானே உங்கள் குழந்தைக்குத்தருகிறீர்கள்.

இதோ, உங்கள் அன்புக்கு ஒரு புதிய சின்னம்— டெண்டெர் கேர். புதிய பேபி பவுடர் இன்றைய விஞ்ஞான வளர்ச்சி தரும் பரிசு. நேற்று வரை வந்த பஃப்பர் செய்யப்படாத பவுடர்கள் குழந்தையின் மேனியைப் புண்படுத்தக் கூடும். ஆனால் புதிய டெண்டெர் கேர் சரியாக பஃப்பர் செய்யப் பட்டது. குழந்தையின் சருமம் சிவந்து போய் சில நேரங்களில் லேசாக புண்படுவது கூட உண்டல்லவா? இதெல்லாம் நேராமல் உங்கள் குழந்தையை டெண்டெர் கேர் பாதுகாக்கிறது. அதன் நிகரற்ற வியர்வை உறிஞ்சும் சக்தி உங்கள் குழந்தையை எப்போதும் வசதியாக, மகிழ்ச்சியுடன் இருக்கச் செய்கிறது.

பட்டுப் போன்ற டால்க், மிதமான நறு மணம்— எல்லாமே அதில் கவனமாக சேர்க்கப் பட்டுள்ளன, உங்கள் குழந்தைக்காக. அதை 'டெண்டெர் கேர்' என்று அழைப்பதே அதனால்தானே.

CTC.G.I.TM

# பொன்னியின் புதல்வர்

சுந்தா



## 5. ஆரம்ப குரு

**எங்கிருந்தோ வந்து எழுத்தறிவித்துப்
பொங்கிடச் செய்தார் அறிவுப்புனலை**

சிறுவன் கிருஷ்ணமூர்த்தி இயற்கையாய்க் கொண்டிருந்த புத்தி கூர்மை, ஞாபக சக்தி, கண்ணோட்டம் ஆகியவற்றை அய்யாசாமி அய்யர் பேணிப் பெருகச் செய்தார். கிருஷ்ணமூர்த்தியின் அண்ணனிடமிருந்து அந்தக் குருவைப் பற்றிய தகவல்களை இந் நூலாசிரியன் கேட்டறிந்த போது, அவர் அப்படியே அச்செடுத்து வார்த்தாற்போல், கல்கியின் தொடக்க காலக் கதைகள் இரண்டில் இடம் பெற்றுள்ளார் என்பது நினைவுக்கு வந்தது. அந்தக் கதைகளில் வரும் பெயர்களுக்குப் பதிலாக அய்யாசாமி அய்யரின் பெயரை வைத்துக் கொண்டால் போதும்; அவரைப் பற்றிய விவரங்களைத் தெளிவாகக் காணலாம்.

முதலாவதாக ''விஷ மந்திரம்'' என்ற கதையின் தொடக்கப் பகுதியிலிருந்து :

''பக்திமான்'' என்றால் எங்கள் ஊர் போஸ்டுமாஸ்டருக்கே தகும். பாகவத புராணமே அவருடைய வேதம்; கண்ணனே அவருடைய தெய்வம். வீட்டுக் கூடத்தில் அழகியதொரு சிறு மண்டபம் கட்டி, அதில் கண்ணபிரான் படத்தை ஸ்தாபித்திருந்தார். தினந்தோறும் மாலையானதும், அவர் மனைவி படங்களை மலர் மாலைகளால் அலங்கரித்துத் திருவிளக்கேற்றி வைப்பாள். போஸ்டுமாஸ்டர் தம்புராவில் சுருதி கூட்டிக் கொண்டு ராம ஜெபம் செய்வார். சனிக்கிழமை ஏகாதசி தினங்களில் பஜனை நடைபெறும். சுண்டல், வடை, பாயசம் — குழந்தைகளுக்குக் கொண்டாட்டம்!

அய்யாசாமி அய்யருக்குச் சொந்தத்தில் குழந்தைகள் இல்லை. ஆனால் ஊரிலுள்ள குழந்தைகள் எல்லாம் அவருடைய குழந்தைகள் போல்தான். இத்தனைக்கும் உபாத்தியாயர் 'ஸார்' என்றால் பிள்ளைகளெல்லாம் உயிரையே விடுவார்கள். பயத்தினாலன்று; பிரியத்தினால். அவருடைய மாணாக்கர்களுக்கு இராமாயணம், மகாபாரதம், பாகவதம் இவற்றிலுள்ள கதைகள் ஒன்று விடாமல் தெரியும். தாயுமானவர் பாடலில் மூன்று பாடல் நெட்டுருவாய் ஒப்பிக்கும் மாணாக்கனுக்குக் கற்கண்டு வாங்கித் தருவதாய்ச் சொல்வார். ஒருவரும் ஒப்புவிக்கா விட்டால் கற்கண்டை எல்லோருக்கும் பங்கிட்டுக் கொடுத்து விடுவார்!



புத்தமங்கலத்தை ஒட்டிய கிராமப்புறக் காட்சி.

கற்கண்டுப் பரிசு பெறும் பாலும் கிருஷ்ணமூர்த்

திக்கே கிடைக்கும் என்பதை இங்கே சேர்த்துக் கொள்ளலாம்.

மார்கழி மாதம் வரப் போகிறது என்றால், அய்யாசாமி அய்யரின் மனைவி புரட்டாசி மாதத்திலிருந்தே சாமான்கள் சேகரித்து வைப்பாள். அம் மாதத்தில் தினந்தோறும் வைகறையில் சிறுவர்கள் பஜனை செய்து கொண்டு ஊர்வலம் வருவார்கள். ஊர்வலம் போஸ்ட்மாஸ்டர் வீட்டில் வந்து முடியும். பின்னர் பொங்கல், புளியோதரை, சர்க்கரைப் பொங்கல் வகையறுக்களைக் குழந்தைகள் உண்டு ஆனந்திப்பதைக் கண்டு கணவனும் மனைவியும் பெருமகிழ்ச்சி எய்துவார்கள்.

ஊர்வலத்துக்குக் கிருஷ்ணமூர்த்தியே தலைமை வகிப்பான்.

நான் அவருடைய பழைய மாணுக்களுதலால், அவரைப் பற்றி மிகைபடப் புகழ்ந்து கூறுகிறேன் என்று நீங்கள் சொல்லலாம். எங்கள் ஊருக்குச் சுற்றுப்புறம் சென்று யாரை வேண்டுமாலுைம் கேட்டுப்பாருங்கள். ஒருமுகமாய் என்னை ஆதரித்துச் சாட்சி சொல்லுவார்கள். அப் பக்கத்தில் அவருக்கு அவ்வளவு செல்வாக்கு, மரியாதை.

■ மார்கழி மாத பஜனை ஊர்வலத்துக்குக் கிருஷ்ணமூர்த்தியே தலைமை வகிப்பான்.



அவருடைய செல்வாக்குக்குக் காரணம் செல்வம் அன்று. அவருக்குப் பொருட் செல்வம் அவ்வளவு இல்லை. அவருடைய தூய ஒழுக்கமும் தெய்வ பக்தியுமே முக்கிய காரணங்களாகும். இத்துடன் அவருக்கு விஷக்கடி மந்திரத்தில் விசேஷ தேர்ச்சியுண்டு. அவரிடம் ஜனங்கள் விசுவாசம் கொண்டிருந்ததற்கு இதுவும் ஒரு காரணமாகும். பகலிலும் இரவிலும், எந்த நிமிஷத்திலும், பாம்புக் கடி என்று வந்தால் அவர் சிறிதும் தயங்குவதில்லை.

■ "தமிழில் வசன நடை எழுதி வழிகாட்டிய பெரியார்களில் ஸ்ரீ ஆறுமுக நாவலர் முதன்மையான ஒருவர் என்று பிற்காலத்தில் எனக்குத் தெரியவந்தது."

தலைவலியையும் மலைச் சுரத்தையும் பொருட்படுத்தாமல் அவர் உடனே தலை முழுகி ஈரத் துணியுடன் மந்திரம் செய்யத்தொடங்குவார். மூர்ச்சையாகி வந்தவர்கள் விஷம் இறங்கப் பெற்றுத் தெளிவடைந்து 'தபால் ஐயரை' வாழ்த்திக் கொண்டு செல்வார்கள். ஆனால் ஐயரோ இரண்டு மூன்று தினங்கள் பொறுக்க முடியாத தலைவலி உபத்திரவத்தினால் வருந்திக் கொண்டிருப்பார்.

■ வெற்றிலைக் கட்டை வாங்கிக் குடுமித் தலைக்குமேல் வைத்துக் கொண்டு வந்தால் ...





அவருடைய தான தருமங்கள் புத்தக ஆசை ஆகியவை பற்றிய விவரம் ''ஆயுள் கைதி'' என்ற கதையில் வருகிறது :

அவர் குடியிருந்த சிறு வீட்டைத் தவிர வேறு சொத்து என்பது அவருக்கு அணுவளவும் கிடையாது. பணம் மிக்க வேண்டும் என்ற எண்ணம் அவருக்கு உதயமாகவே இல்லை. அப்படி உதயமானாலும் அவரால் அது இயல்வதில்லை. வருஷந்தோறும் கிராண்ட் தொகை வந்து கொண்டிருந்த காலங்களில், கிராண்டு வந்ததும் ஏதேனும் ஒரு பெரிய காரியம் செய்வார். ஒரு வருஷம் வீதியில் ஒரு கிணறு, மற்றொரு வருஷம் ஓர் அனுமார் கோயில், இன்னொரு வருஷம் கோயிலுக்குக் கும்பாபிஷேகம், மற்றொரு வருஷம் ராதா கல்யாண உற்சவம், வேறொரு வருஷம் ஊருக்கு ஒரு நந்தவனம் — இப்படி ஏதேனும் ஒரு பெரிய செலவுக்கு முன்னாடியே திட்டம் போட்டிருப்பார் ...

மாத வருமானத்தில் வீட்டுக்குச் செலவு செய்தது போக மிருந்த பணத்தைக்கொண்டு புத்தகம் வரவழைப்பார். மாதம் ஒரு புத்தகம் தருவிக்காமலிருக்க மாட்டார். அவரிடம் தற்போது தமிழிலும் இங்கிலீஷிலுமாகச் சுமார் 1000 ரூபாய் பெறுமான 100 புத்தகங்கள் இருந்தன. கூடத்துச் சுவரில் மூளையடித்து அமைந்திருந்த பலகைகளில் அவை வரிசையாக வைக்கப்பட்டிருந்தன.

மற்ற ஜனங்கள் நிலபுலங்களிடத்தும், குழந்தை குட்டிகளிடத்தும் வைக்கும் பிரேமையை யெல்லாம் அய்யாசாமி அய்யர் தமது புத்தகங்களிடம் வைத்திருந்தார். புத்தகங்கள்தான் அவருடைய ஆஸ்தி. அவைதான் அவரது பொக்கிஷம்; அவருடைய உயிரே புத்தகங்களில்தான் இருந்தன என்று சொல்லலாம்.

மற்ற விஷயங்களில் அவரைப் போல் தாராள புத்தி படைத்தவர்களைக் காண்பது அருமை. பிறர் இரவலோ யாசகமோ கேட்டு அவர் கொடுக்காத பொருள் ஒன்றும் இடையாது. யாராவது மிக்க வறியவனைக் கண்டால் மேல் துணியைக் கூடக்கொடுத்து விடுவார். ஆனால், புத்தகம் மட்டும் ஒரு நாளும் இரவல் கொடுக்க மாட்டார்.... சிரத்தையுள்ளவர்கள் அவர் வீட்டிற்கு வந்து எந்தப் புத்தகம் வேண்டுமானாலும் கேட்டு எடுத்துப் படிக்கலாம். ஆனால் வீட்டை விட்டுப் புத்தகத்தை வெளியே கொண்டு போவதென்பது திரிநேத்திரன் வந்தாலும் நடவாத காரியம்.

பக்கத்து வீட்டுப் பையனாகவும், அவருடைய தனி அபிமானத்துக்கு உரியவனாகவும் கிருஷ்ணமூர்த்தி இருந்ததால், அவன் மட்டும் புத்தகங்களை அவனுடைய வீட்டுக்குக் கொண்டு போய்ப் படிக்கலாம்.

அய்யரின் பொக்கிஷத்தில் இருந்தவை எவ்விதமானவை என்பதற்குச் சில புத்தகங்களைப் பார்க்கலாம்:

தமிழில் — பாகவதம், பக்த விஜயம்; ஆரிய மத உபாக்கியானம்; நடேச சாஸ்திரியாரின் வால்மீகி இராமாயணம்; வி. ஆர். ஸ்ரீநிவாசனின் இராமாயணம்.

ஆங்கிலத்தில் — எட்வின் ஆர்னால்டின் ஆசிய ஜோதி; ராமகிருஷ்ண பரமஹம்ஸர், விவேகாநந்தர், மெஹர் பாபா நூல்கள்; தர்யேந்திரநாத் எழுதிய இராமாயணப் புதிர்கள்; மெடோஸ் டெய்லரின், சீதா, தாரா; லார்ட் கௌரங்கா நூல்கள்.

அய்யாசாமி அய்யர் அளித்த பயிற்சியினால், பன்னிரண்டு வயதுக்குள்ளேயே கனமான தமிழ் நூல்களையும், பதினைந்து வயதுக்குள்ளேயே கடினமான ஆங்கில நூல்களையும் புரிந்து கொள்ளும் தேர்ச்சியைக் கிருஷ்ணமூர்த்தி அடைந்துவிட்டான். பழைய மெட்ரிக்குலேஷன் தேறியவர் அய்யர்; அதன் தரம் இப்போதைய பி.ஏ.க்கும் உயர்வானது. பள்ளிப் படிப்பு முடிந்து உத்தியோகம் பார்த்துக் கொண்டிருந்த போதும், பல நூல்களை அவர் படித்து இரு மொழிகளிலும் அவை மூலமாயும் அறிவை வளர்த்துக் கொண்டவர்.

படிக்கும்போது மனத்தில் எழும் சந்தேகங்களை யெல்லாம் கிருஷ்ணமூர்த்தி அடுத்த வீட்டுக் குருவிடம் கேட்பான். அவர் சொல்லும் விளக்கம் சரியானதல்ல என்று தோன்றினால், துணிந்து அவருடன் வாதம் செய்வான். சில கேள்விகளால் அவன் பெரியவரைத் திணற அடிப்பதும் உண்டு. யோசித்துப் பிறகு பதில் சொல்லுவதாகச் சில சமயங்களில் அவர் கூறுவார்; அப்படியே யோசித்துப் பதிலும் சொல்லுவார். இயலாவிட்டால், பெரியோர் வாக்கை எல்லாம் தூண்டித் துருவிப் பார்க்காமல், அப்படியே நம்ப வேண்டும் என்பார்.

''புஸ்தகம் ஹஸ்த பூஷணம்'' என்பதை அய்யர்தான் தமது அருமை அகஸ்தியனுக்குச் சொல்லியும் பழக்கியும் கொடுத்தார். புத்தகம் கைக்கு அணிகலந்தான்; ஆனாலும், கை இருப்பதே புஸ்தகத்தைப் பற்றுவதற்காகத் தான் எனப் பொருள் கொண்டது போல், எப்போதும் அவன் புத்தகமும் கையுமாய் இருந்ததைக் கண்டு, அவனைப் ''புஸ்தகப் புழு'' என்று அய்யர் கேலி செய்யலானார். திண்ணையில் அவன் குப்புறப் படுத்துக் கொண்டு படிப்பதைப் பார்த்தால், அந்தக் கேலிப் பெயருக்குப் பொருத்தமாகவே இருப்பான்.

ஒரு சமயம் அவன் புத்தகம் ஒன்றை ஊன்றிப் படித்துக்கொண்டிருந்தபோது,

மணல் மேட்டுக்குப் போய் ஒரு கவுளி வெற்றிலை வாங்கி வரும்படி தாயார் சொன்னார். படித்துக்கொண்டே அவன் நடந்து, வெற்றிலைக் கட்டை வாங்கிக் குடுமித் தலைக்கு மேல் வைத்துக் கொண்டு, மறுபடியும் படித்துக் கொண்டே வீடு திரும்பினான். படி ஏறுகையில் தலையில் கை வைத்தபோது, வெற்றிலைக் கவுளியைக் காணோம். குடு குடுவென்று வந்த பாதையில் ஓடினான். முக்குத் திருப்பத்தில் ஒரு வேலிக்கு அருகே, நாலைந்து ஆடுகள் அந்த வெற்றிலைக் கவுளியைப் பகிர்ந்து தின்று கொண்டிருந்தன.

தலை மேல் வைத்ததைத் தவறவிட்டது போல், மடியில் கட்டியதையும் பல தடவை நழுவ விட்டதுண்டு.

ஒரு நாள் அவனுடைய தாயார், புழுங்கிய நெல்லைத் தெருவில் விரித்து, உலரப் போட்டு, திண்ணையில் புத்தகமும் கையுமாய் நெளிந்து கொண்டிருந்த பிள்ளையிடம் ஒரு கம்பைக் கொடுத்துக் காவல் காக்கச் சொன்னார். சிறிது நேரம் அவன் மிக்க பொறுப்புடன், புத்தகத்திலும் நெல்லிலும் மாறி மாறிக் கவனத்தைச் செலுத்திக் கொண்டிருந்தான். பிறகு, நெல்லை மறந்து புத்தகத்திலேயே லயித்து விட்டான். ஏதோ கூக்குரல் கேட்டு அவன் பார்த்த போது, புழுங்கல் நெல்லில் பாதிக்கு மேல் ஒரு மாடு விழுங்கிவிட்டு ஓடுவதைக் கண்டான்.

அந்தப் பிள்ளையை இனி கடைக்குப் போகச் சொல்லவோ, காவல் போடவோ கூடாது என்று வீட்டிலுள்ளோர் யாவரும் ஒருமனதாய்த் தீர்மானம் செய்தார்கள். தனக்குக் கிடைத்த விடுதலையை எண்ணி மட்டில்லா மகிழ்ச்சி அடைந்தான் கிருஷ்ண மூர்த்தி. தம்பி செய்ய வேண்டிய காரியங்களை அண்ணன் ஏற்றுச் செய்தான்.

நிற்க, முன் குறிப்பிட்ட ''விஷ மந்திரம்'' கதையின் தொடர்ச்சியைப் பார்த்து, அய்யாசாமி அய்யரின் வேறு சில குணங்களை அறிந்து கொள்ளலாம்:

அவருக்குக் காந்தியடிகளிடம் பக்தி அதிகம் உண்டு. அவர் தேச பக்தருங்கூட. வங்காளப் பிரிவினைக் காலத்திலிருந்து சுதேசி விரதம் அனுஷ்டித்து வருபவர். ஆனாலும், மகாத்மா காந்தியின் திட்டங்களுள் 'தீண்டாமை விலக்கு' மட்டும் அவருக்கு விலக்கு. எனக்கும் போஸ்டு மாஸ்டருக்கும் இது சம்பந்தமாய் நடந்த விவாதங்களுக்கு எல்லையில்லை ....

அவருடைய அம்பறாத் தூணியில் எல்லா பாணங்களையும் விட்டான பிறகு கடைசியாக அவர் பிரயோகிக்கும் பாணம் இதுவே:

''எல்லாம் சரி! நான் உனக்குப் பிரத்தியக்ஷமாகக் காட்டுகிறேன். கொடிய விஷ சர்ப்பம் தீண்டியவன் ஒருவன் இங்கு வரட்டும். மூன்றாவது மூர்ச்சை போட்டவனாகவே இருக்கட்டும். இதோ மந்திரம் செய்து விஷம் இறங்கச் செய்கிறேன், பார்! நீயே பல முறை இந்த மந்திரச் சக்தியைப் பார்த்திருக்கிறாய். ஆனால், ஸ்நானம் செய்த பின்னர் ஒரு பறையனுடைய காற்று மட்டும் என் பேரில் படட்டும். அப்போது மந்திரம் பலிப்பதில்லையே! விஷம் இறங்குவதில்லையே! இதற்கென்ன சொல்கிறாய்?''

கதையில் இதுவரை உள்ளதெல்லாம் அய்யாசாமி அய்யருக்குப் பொருந்தும். ஆனால் இதற்கு மேல் வருவது முழுதும் கல்கியின் கற்பனை. அந்தக் கற்பனைத் தொடர்ச்சியின் சுருக்கம் இதுதான்:

ஒரு நாள் தபால் நிலையத்தை மேற்பார்வை இடுவதற்காக ஓர் அதிகாரி வந்திருக்கும் போது பாம்பு கடித்தவன் ஒருவனை நாலைந்து பேர் தூக்கிக் கொண்டு வந்து, அவனைக் காப்பாற்றும்படி அய்யாசாமி அய்யரை வேண்டுகிறார்கள். அய்யரும் உடனே ஸ்நானம் செய்து, மடியாக வந்து, மந்திரம் போட்டு விஷத்தை இறக்கிவிடுகிறார். பாம்புக் கடிபட்டவன் குணம் அடைந்து சென்ற பிறகு, அய்யாசாமி அய்யர் வழக்கமான தமது வாதத்தை எடுத்துச் சொல்லி, யாரேனும் தீண்டாதவனுடைய தீட்டுத் தம் மீது பட்டிருந்தால், தமது மந்திரம் பலித்திருக்காது என்று சொல்கிறார். அதை அந்த மேல் அதிகாரி கேட்டுச் சிரித்துவிட்டு, ''நான் ஒரு பறையன்'' என்று அறிவிக்கிறார்.

''நவசக்தி'' பத்திரிகையில் வெளியான இந்தக் கதையை அய்யாசாமி அய்யர் படித்துவிட்டு மிகவும் வருத்தப்பட்டார். அடுத்த தடவை கிருஷ்ண மூர்த்தி கிராமத்துக்கு வந்தபோது, ''என்னை இப்படித் தீண்டாமைப் பிரச்னையுடன் சம்பந்தப்படுத்தி நீ கதை எழுதியது தகுமா?'' என்று கேட்டார்.

அந்த ஒரு சந்தர்ப்பத்தில்தான் தமது அருமை ஸாரின் மனத்தைக் கிருஷ்ண மூர்த்தி நோகச் செய்ய நேர்ந்தது.

மேலே குறிப்பிட்ட கதையை எழுதியதற்குச் சிறிது காலத்துக்குப் பிறகு, ''ஆரம்ப ஆசிரியர்'' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை எழுதினார், கல்கி — நல்ல எழுத்தாளராய் அவர் பரிணமித்துக் கொண்டிருந்த சமயம் அது. அந்தக் கட்டுரையின் ஊடே, தமது குருவுக்கு நன்றியும் வணக்கமும் தெரிவித்தார்:

'ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது' என்பது பழமொழி. ஐந்தில் வளைப்ப

வர் ஆரம்ப ஆசிரியர். அவர் கோணலாய் வளைத்து விட்டால் வாழ்க்கை பூராவும் கோணல்தான். நாட்டின் வருங்காலப் பிரஜைகள் வளருமிடம் ஆரம்பப் பள்ளிக் கூடங்கள். தேச மக்கள் தீரம் மிக்க ஆண் சிங்கங்களாய் விளங்குவதும், கோழைத் தனம் வாய்ந்த அடிமைகளாயிருப்பதும் ஆரம்ப ஆசிரியர்களின் கைவேலையாகும்...

நான் இத்தனை சக்கர வட்டமாக எழுதுவதெல்லாம் ஓர் ஆரம்ப ஆசிரியரின் அருளினால்தான். அவர் இருக்கும் திக்கு நோக்கித் தண்டம் சமர்ப்பிக்கிறேன்.

(ஏட்டிக்குப் போட்டி — புத்தகம்)

1938ல் இலங்கையில் பிரயாணம் செய்து திரும்பிய பின், தாம் எழுதிய கட்டுரைத் தொடரில் கல்கி, அய்யாசாமி அய்யர் சம்பந்தப்பட்ட பாலிய அனுபவம் ஒன்றைக் குறிப்பிட்டார்:

யாழ்ப்பாணத்தைப் போய்ப் பார்க்க வேண்டுமென்ற விருப்பம் எனக்கு உண்டாகி எத்தனையோ காலம் ஆயிற்று. அதை ஒரு புண்ணிய க்ஷேத்திரமாகவே நான் கருதி வந்தேன். ஸ்ரீ ஆறுமுக நாவலரைத் தமிழகத்துக்கு அளித்த நகரமல்லவா யாழ்ப்பாணம்?

ஸ்ரீ ஆறுமுக நாவலரைப் பற்றி நான் முதன் முதலாக அறிந்தது சுமார் இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்னால். எங்கள் கிராமத்தில் வாரம் ஒரு முறை சந்தை கூடுவது வழக்கம். ஒருநாள் சந்தைக்கு நானும் என்னுடைய உபாத்தியாயரும் போயிருந்தோம். சந்தையில் ஒரு மூலையில் ஒரு சிறு கூட்டம் சேர்ந்திருந்தது. அது என்னவென்று போய்ப் பார்த்தோம். அந்தக் கூட்டத்தின் மத்தியில் ஒரு கிறிஸ்தவப் பாதிரியார் நின்று கொண்டிருந்தார். அவர் அங்கே மதப் பிரசாரம் செய்து கொண்டிருந்தார் என்று தெரிந்தது. சுற்றி நின்றவர்கள் கையில் துண்டுப் பிரசுரங்கள் இருந்தன. அவை கிறிஸ்தவ மதத்தின் மேன்மையையும் ஹிந்து மதத்தின் தாழ்வையும் விவரிக்கும் பிரசுரங்கள். அந்தப் பிரசுரங்களைப் படித்த ஒருவர் கூட்டத்தை விலக்கிக் கொண்டு பாதிரியார் அருகில் சென்றார். மேற்படி பிரசுரங்களை எல்லார் முன்பாகவும் சுக்கு நூறாகக் கிழித்து அந்தப் பாதிரியார் தலைமேல் போட்டார். உடனே, அவர் வந்த வழியே திரும்பிச் சென்றார். பாதிரியாருக்கோ இதனால் வெகு உற்சாகம்! அவர் அங்கிருந்த மற்றவர்களை நோக்கி, ''பார்த்தீர்களா? இந்த மனுஷர் அஞ்ஞானி என்பதை அவரே மெய்ப்படுத்தி விட்டார்! பதில் சொல்ல முடியாததனால்தானே பிரசுரங்களைக் கிழித்துப் போட்டார்?'' என்றார்.

இந்தச் சம்பவம் என்னுடைய உபாத்தியாயரின் உள்ளத்தில் வெகுவாய்ப் பதிந்து விட்டது. மேற்படி பாதிரியாருடைய பிரசாரத்திற்கு எதிர்ப் பிரசாரம் செய்ய வேண்டுமென்று அவருக்குத் தோன்றி விட்டது. வீட்டுக்குப் போனதும், சென்னைப் பட்டணத்திலுள்ள ஒரு புஸ்தகக் கடைக்குச் சிற்சில புத்தகங்களை அனுப்பி வைக்கும்படி கடிதம் எழுதினார். புஸ்தகங்கள் வந்து சேர்ந்தன. அவையெல்லாம் ஆறுமுகநாவலரின் புஸ்தகங்கள். அவற்றில் ஒரு பகுதி பாலர் பாடம் 1, 2, 3 முதலியவை. இன்னொரு பகுதி, ஹிந்து மதத்தின் பெருமைகளை விளக்கிக் கிறிஸ்தவ மதப் பிரசாரத்தைக் கண்டனம் செய்பவை. இந்தப் பிரசுரங்களையெல்லாம் நான் படித்தேன். பால பாடங்களைப் படித்ததிலிருந்து தமிழை எவ்வளவு சரளமாகக் கையாளலாம் என்பதை ஒருவாறு அறிந்து கொண்டேன். மதப் பிரசுரங்களிலிருந்து, தமிழ்மொழி எவ்வளவு வன்மை பொருந்தியது என்பதை அறிந்தேன். தமிழில் வசன நடை எழுதி வழி காட்டிய பெரியார்களில் ஸ்ரீ ஆறுமுக நாவலர் முதன்மையான ஒருவர் என்று பிற்காலத்தில் எனக்குத் தெரிய வந்தது.

அய்யாசாமி அய்யர் மூலம் கல்கி கற்ற மொழி அறிவும், பொது அறிவும், இதிகாச புராணங்களும், பக்திப் பண்பாடும், அவர் எழுத்தாளராய்ச் சிறப்பதற்கு அடிப்படையாய் அமைந்தன. ''அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்'' என்று அய்யர் செய்த போதனையினால் தம் பெற்றோரைக் கல்கி போற்றித் தொழக் கற்றுக் கொண்டார். அய்யர் மீது கொண்ட குரு பக்தி, பின்னர் ராஜாஜியிடமும் மகாத்மா காந்தியிடமும் பக்தி கொள்ள அவருடைய மனத்தைப்பக்குவப்படுத்திற்று.

1923ல் கல்கி சென்னைக்குச் சென்று சம்பாதிக்கத் தொடங்கியதிலிருந்தே, அய்யாசாமி அய்யருக்குப் பண உதவி செய்யலானார். முதலில் அவ்வப்போது கொஞ்சம் கொஞ்சம் பணம் அனுப்பினார். பின்னர் மாதா மாதம் இருபத்தைந்து ரூபாய் அனுப்பினார். தாம் நூறு ரூபாய்க்குக் குறைவாய் வருவாய் கொண்டிருந்த போதும், தமது குடும்பத்துக்கு ஏற்பட்ட கடனை அடைத்துக் கொண்டிருந்த போதும், அந்தப் பண உதவியைத் தமது குருவுக்கு அளித்து வந்தார்.

அய்யாசாமி அய்யர், தம் பத்தினியின் ஊரான கும்பகோணத்துக்குக் குடி மாற விரும்பிய போது, அவருடைய வீட்டைக் கல்கி கெட்டித்தட்ட இரு மடங்கு விலைக்கு வாங்கிக் கொண்டார். (தமக்கே குருவின் நினைவாய் இருக்கட்டும் என்று கல்கி வைத்திருந்த அந்த வீட்டை, பின்னர், கிராமத்துக்குப் புதிதாய் வந்த புரோகிதர் ஒருவரின் குடியிருப்புக்காக விற்றுவிட்டார்.)

கடைசியாகத் தமது குருவைக் கல்கி, 1939 அக்டோபர் மாதத்தில் கும்பகோணத்தில் பார்த்தார். அப்போது கல்கி அடைந்திருந்த புகழே குருவுக்கு மிகவும் உவப்பான காணிக்கையாய் இருந்திருக்கும். (தொடரும்)

# பாருங்கள் எப்படி ப்யூரிடாஸ் ஃபில்ட்டர்கள் சாதாரணக் குழாய் நீரை வடிகட்டி அசுத்தங்களை நீக்கி நூற்றுக்கு நூறு தீங்கற்ற நல்ல குடி நீராக ஆக்கிவிடுகிறது

நீர்வழிப் பரவும் நோய்களான காலரா, டைஃபாயிடு, சீத பேதி, இரைப்பை-குடல் அழற்சி முதலியவற்றைத் தடுத்துக் காக்க இதைவிட மேலான உத்தரவாதம் எதுவுமில்லை.




ப்யூரிடாஸ் இலேசானது, உடையவே உடையாது.
தூக்கிச் செல்ல வாகானது, துப்புரவாக்க இலகுவானது.



உங்கள்
ஆதரவுக்குரிய
வர்களுக்கு
ஆதரவளியுங்கள்:
இன்றே பெறுவீர்
ஒரு ப்யூரிடாஸ்



இலவசக் கைப்
புத்தகத்திற்கு எழுதுக:

**பல்சாரா**
நலமான வாழ்க்கைக்கு
நவீனமான வசதிகள்

BALSARA

CHAITRA-BLS-19 TAM

அட்டைப்பட
விளக்கம்



# கானத்தில் வரும் காமாக்ஷியன்னை

சகல புவனங்களும் உறங்கும்போதும், நம் பொறி புலன்கள் யாவும் உறங்கும்போதும் உறங்காமலே இருந்து உலக நடப்புக்களை இயக்கிக் கொண்டிருக்கும் மகா சக்தியைத் தான் காமாக்ஷி என்கிறோம். ஆனால் பக்தியின் ஸ்வாதீனத்தை என்னென்பது? க்ஷண நேரமும் உறங்காத அந்தப் பராசக்தி துயில் கொண்டிருப்பதாகப் பாவித்து அவளுக்குத் திருப்பள்ளி எழுச்சி பாடுவதில் பக்தியின் கவித்வ அழகு ஓர் அலாதி நிறைவு பெறுகிறது. இப்படிப்பட்ட அன்னையன்பையும் இலக்கியச் சுவையையும், கம்பீரமும் லளிதமும் ஒருங்கே கமழும் வடமொழியின் வாடாத வார்த்தைகளில் வடித்து உருவானதே ''ஸ்ரீ காமாக்ஷி ஸுப்ரபாதம்''. காலஞ்சென்ற ஸ்ரீ லக்ஷ்மீகாந்த சர்மா இயற்றியது இத்துதி. அவர் இயற்றியதாகச் சொன்னாலும் இதற்கு அருளூக்கம் அளித்தது ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்களின் அநுக்கிரக சக்தியேயாகும்.

அமுதமான காமாக்ஷியைக் குறித்த இந்த அமுதக் கருவூலம் ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் அமுதக் குரலில் இசைத்தட்டாக மலர்ந்திருப்பது நம் பாக்கியம் என்றே சொல்ல வேண்டும். அம்பிகையின் அழகுப் பெருமை, அருள் மகிமை, அவள் பரமசிவனுடன் வதியும் பள்ளியறையின் எழில், வைகறையின் விமரிசை, அவ்வேளையில் பக்தர் மனங்களில் அருணோதயம் பொலிவிக்கும் அன்னையின் பாவன தரிசனம்— இவற்றை யெல்லாம் ஜீவசக்தி செறிந்த எம். எஸ்ஸின் நெகிழ்ச்சிக் குரலில் கேட்கும்போது நம் உள்ளம் அப்படியே உருகி விடுகிறது.

குறிப்பாக, அன்னையின் தரிசனத்துக்காகக் காஞ்சிப் பெரியவர்கள் வெளியே காத்திருப்பதாகவும், எனவே அவள் விரைவுடன் எழுந்திருந்து வெளி வர வேண்டும் என்றும் ஸ்ரீமதி எம். எஸ். கனிந்து, குழைந்து கானம் செய்யக் கேட்கையில் மூல காமாக்ஷியையும் அவளது நடமாடும் வடிவாம் ஆசாரியர்களையும் நம் உள்ளுக்குள்ளேயே கண்டுகொண்ட உணர்வு பொங்குகிறது.

தர்மம் என்ற உருவில் எப்போதும் உறங்காமலே இருக்கும் அன்னை, அந்தத் தர்மத்தின்பொருட்டே ஒருவேளை இப்போது நம் பாவங்களுக்குத் தண்டனையாக உலகின் பல விதக் கொடுமைகளைக் காணாமல் கண் உறங்குவதுபோல் இருக்கிறாளோ என்னவோ? இச்சமயத்தில் எம். எஸ்ஸின் சுப்ரபாதப் பிரார்த்தனை அந்தத் தர்ம மூர்த்தியைத் தயை மூர்த்தியாக்கி, அன்புத் தாயாக்கி எழுந்



தருளுவித்து, உலகில் சகல கபிட்சங்களேயும் பொலிவித்துவிடும் என்ற நம்பிக்கைச் சூரிய ஒளி படரத் தொடங்குகிறது. எம். எஸ் ஸின் நா நலத்தால் நானிலம் செழிக்கட்டும்! அவர் இசைக்கும் உதய ராகத்தால் அன்னே உள்ளம் குளிர்ந்து பூமியைப் பரிபாலிக்கத் திரு உளம் பற்றட்டும்!

*        *        *

கிராமபோன் கம்பெனியார் இந்தச் செப்டம்பர் எட்டாம் தேதி நாட்டின் பல இடங்களில் பல பெரியோர்களைக் கொண்டு வெளியிடவிருக்கும் '' ஸ்ரீ காமாக்ஷி எல்.பி.'' யில் சுப்ரபாதத்தோடுகூட அன்னே காமாக்ஷியைக் குறித்த வேறு அமர கீதங்களேயும் இசைத்திருக்கிருர் ஸ்ரீமதி எம். எஸ். மும்மூர்த்திகளில் முத்துஸ்வாமி தீக்ஷிதரின் ''கஞ்சதளாயதாக்ஷி'', ஸ்யாமா சாஸ்திரிகளின் ''கனகசைல'', தியாகையரின் ''விநாயகுனி'' இவற்றை ஒருங்கே திரட்டித் தருகிருர். மைசூர் ஸ்ரீ சதாசிவ ராவ் இயற்றிய ''ஸ்ரீ காமகோடி பீட ஸ்திதே'' நடுநாயகம் வகிக்கிறது. கீர்த்தனங்களின் முகப்பில் பகவத் பாதர்களின் வாக்கான ஸௌந்தர்ய லஹரி சுலோகங்கள் இரண்டும் மூகபஞ்சசதி சுலோகம் ஒன்றும் பாடப்பட்டுள்ளன. கற்கண்டு மலேயில் எந்த இடம் அதிக இனிமையானது என்று எடை போடுவதுண்டோ? அவ்வாறு இப் பாடல்களில் ஒவ்வொன்றும் ஸ்ரீ காமாக்ஷி தேவியின் காருண்யத் தேனேயே பிலிற்றுவது போல் காதுக்கும் கருத்துக்கும் தெவிட்டாத தேவாமிருதமாக அமைந்திருக்கிறது.

தமது கானத்தின் பலனேயெல்லாம் தானம் செய்வதையே ஜீவிய விரதமாகக் கொண்டுள்ள ஸ்ரீமதி எம். எஸ். அவர்கள் இவ் விசைத் தட்டின் தமக்குரிய 'ராயல்டி' தொகை முழுவதையும் ஸ்ரீ காஞ்சி காமாக்ஷியம்பிகைக்கே சமர்ப்பிப்பது குறிப்பிடத்தக்கது.

காஞ்சி முனிவரின் இஷ்ட தெய்வமாம் ஸ்ரீ காமாக்ஷியின் ஆலய புனருத்தாரணம் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது; சில மாதங்களில் கும்பாபிஷேகமும் நடக்கப் போகிறது. இப்போதே எம். எஸ். அவர்கள் இவ்விசைத் தட்டின் மூலம் அம்பாளுக்கு மகோன்னதமான சப்தஸ்வர ஆலயம் எழுப்பிவிட்டார். தமது இதய கும்பத்திலிருந்து பக்தி நன்னீரைப் பெருக்கி மகாபிஷேகமும் புரிந்து விட்டார். இல்லம்தோறும் இவ்விசைத் தட்டு இனிக்க முழங்கி, அந்த அன்பு நீரில் அனைவரும் முழுகுவராக!

—கன்யா



# கி. பி. 2024



''டிம்பிள் கபாடியா போக்குவரத்துக் கழக''த்தில் ஆண்களுக்கென்று சில குறிப்பிட்ட இடங்கள் தாம் உள்ளன. ஆண்கள் ஏறியவுடன் 'நடத்துனி' ''ஆம்பளேச் சீட்டைக் காலி செய்மா'' என்றும், ''ஏறினவுடன் பின்னுலேயே நின்னு இன்னுமா முறைக்கப் பார்க்கிறே! முன்னுலே போமா !''. என்றும் விரட்டுகிருள்.

ஆண்கள் கல்லூரி முன் போலீஸ் காவல். காரணம் - சகிக்க முடியாத அளவு பெண்களின் ''ஆடம் டீஸிங்''தான்.

ஒரு தனியார் கம்பெனி விளம்பரம்: ''எங்கள் கம்பெனி காரியதரிசினிக்கு.....அந்தரங்க உதவியாளராகக் கவர்ச்சியான வாலிபன் தேவை. சமீபத்திய பாஸ்போர்ட் அளவு போட்டோவுடன் விண்ணப்பிக்கவும். கண்டிப்பாக நேரில் பார்க்க இயலாது.''

ஹோட்டலில் ஆண்களுக்குத் தனி அறை.

தியேட்டரில் ''ஆண்கள் டிக்கெட்டுப் பெண்களுக்குச் செல்லாது'' என்ற அறிவிப்பு தொங்குகிறது.

''பிள்ளே பார்க்க எப்போ போகலாம்?'' பெண் தந்தையிடம் கேட்கிருள்.

பின்னே நாணிக் கோணிக் கொண்டு வந்து நிற்கும் பெண், ''பாடுவாயா?'' என்று கேட்க, அதற்கும் பையனின் அம்மா, ''நன்னு பாடுவான்! சமையலும் பி ர மா த மா பண்ணுவான்'' என்று கூறுகிருள்.

கல்யாண தினத்தன்று சாஸ்திரிகள் ''பிள்ளேயைச் சீக்கிரம் கூப்பிடுங்கோ ! முகூர்த்த நேரம் போயிடப் போறது'' என்று அமர்க்களப்படுத்த மாப்பிள்ளே, கூறை வேட்டியுடன் வர, பெண் தாலியை ரெடியாய் வைத்திருக்க....

இவ்வளவு மாறியும் புருஷன் அலுவலகத்திலிருந்து தாமதமாக வந்தால் ''இவ்வளவு நேரம் எங்கே போயிருந்தீர்கள்?'' என்ற கேள்வி மட்டும் மாறவே மாறாது !

-- அ.க.நரசிம்மன்







# நகர்வலம்........



சென்னையை விட்டுப் புறப்பட்ட திருவனந்தபுரம் மெயில் செங்கோட்டையை அடைந்ததுமே, ஜிலுஜிலுவென்ற காற்றும் மழையும் வீசத் தொடங்கின. சென்னை நகரில் நல்ல மழையைப் பார்த்து வெகு நாட்களானதால் எனக்கு மெய் சிலிர்த்தது. பெயருக்கேற்பப் புனலூரில் மழை தாரையாகக் கொட்டியது. பசுமை போர்த்திய மரகதப் பசும் பொற் குன்றுகளும், அவற்றிலிருந்து பெருகி ஓடும் அருவிகளும் கண்கொள்ளாக் காட்சியா விருந்தன.

(இது கதைகளில் வர்ணனையாக எழுதப்படும் வரிகள் அல்ல; உண்மைக் காட்சிகள் என்பதை மனத்தில் கொள்ளுமாறு வாசகர்களை வேண்டுகிறேன்!)

சென்னை நகரில் குடிதண்ணீருக்குத் தண்ணீராய் உருகும் எனக்கு ரயில் போகும் மார்க்கங்களிலெல்லாம் அருவிகளையும் ஏரிகளையும் பார்த்தபோது வறியவன் புதையலைப் பார்ப்பது போலத்தான் இருந்தது.

செங்கோட்டையில் எனக்குத் துணை வந்த மழை கேரளத்தின் தலைநகரான திருவனந்தபுரத்திலும் தொடர்ந்தது. அந்த ஊரை விட்டுக் கிளம்பும்போது, பிரிவுபசாரமும் நடத்தியது. அதுவும் எப்படி? விட்டு விட்டுப் பெய்து என்னைத் திகைக்க வைத்தது. பல தடவை மழையில் நனையவும் நேர்ந்தது. உடல் ஆர, உளம் ஆர, மழையில் நன்றாய் நனைந்தேன்.

திருவனந்தபுரம் வந்து சேர்ந்ததும் நான் செய்த முதல் காரியம் பத்மநாப ஸ்வாமியைத் தரிசனம் செய்ததுதான். இந்தப்பகுதியின் ஐதிகப்படி கேரளத்தை ஆள்பவரே பத்மநாப ஸ்வாமிதானே! அந்த முறையில், நகர்வலத்துக்கு முன்பு பகவானைத் தரிசிப்பது தானே நியாயம்!

மிகப் பழைமையான ஆலயம், பத்மநாப ஸ்வாமி ஆலயம். முந்நூற்று அறுபத்தெட்டு தூண்களையுடைய மிகப் பெரிய பிராகாரங்களை உடையது. தூண்களின் சிற்ப வேலைப்பாடுகள் அற்புதமானவை. பதினெட்டு அடி நீளத்துக்கும் பத்மநாப ஸ்வாமி கிடந்த திருக்கோலத்தில் காட்சி தருகிறார்.

பகவான் அருள் எனக்கு எடுத்த எடுப்பிலேயே கிடைத்து விட்டது. இவ்வூர் கல்கி, கோகுலம் ஏஜண்ட் திரு கோலப்பன் அவர்களின் காரைத்தான் சொல்லுகிறேன்! திருவனந்தபுரத்துக்குப் போனதும் நம் கவனத்தைக் கவருவது டாக்சிதான். அவற்றின் கூலி மினிமம் ரூ. 4. மொழியும் வழியும் தெரியாத நான் நகர்வலத்துக்கு முக்கியமான இடங்களுக்குப் போக டாக்சியை வைத்துக் கொண்டிருந்தால் எவ்வளவு சிரமப்பட்டிருப்பேன் என்பதை நீங்களே ஊகித்துக் கொள்ளுங்கள்!

பத்மநாப ஸ்வாமியைத் தரிசனம் செய்து கொண்டு நான் செகரடேரியட் கட்டடத்துக்குச் சென்றேன். முதல் அமைச்சரைச் சந்தித்துப் பேச முயன்றேன். அவர் சிறிது உடல் நலம் சரியில்லாதிருந்ததால் முதல் அமைச்சரின் அந்தரங்கக் காரியதரிசி திரு பி. கோவிந்தப் பிள்ளை அவர்களைக் கண்டு பேசினேன். ''கல்கி''பத்திரிகையைப் பற்றித் தமக்குத் தெரியும் என்று கூறித் தலைவர் 'ராஜாஜி அவர்களின் கருத்துக்களைத் தாங்கி வரும் பத்திரிகையல்லவா?' என்று பெருமையுடன் பேசினார்.





# சாதனை மழை! சோதனை மழை! கேரள மழை!

* ஸோமாஸ் *

பிறகு, ''கல்கி''யில் வரும் 'நகர்வலம்' அம்சத்தைப் பற்றி விவரமாகக் கூறினேன். ''படித்தவர்களை அதிகமாகத் தன் அகத்தே கொண்ட முதன்மையான மாநிலம் அல்லவா கேரளம்?'' என்று நான் வந்த வேலையைத் தொடங்கும் எண்ணத்தில் கேட்டேன்.

''அதுமட்டுமல்ல; கேரள மாநிலத்துக்கு எத்தனையோ முதன்மைகள் உண்டு. 'உழுபவனுக்கே நிலம் சொந்தம்' என்னும் கொள்கையை முதன் முதலில் சட்டமாக்கியது கேரள அரசுதான். புறம்போக்கு நிலங்களையும், நிலச்சுவான்தார்களின் அதிகப்படி நிலங்களையும் நிலமற்ற ஏழை விவசாயிகளின் உடைமையாக்கித் தந்த முதல் மாநிலமும் கேரள மாநிலம்தான்! இந்தியாவின் தென் பகுதியில் அதிகப்படியான மழை வளத்தை யுடைய மாநிலமும் கேரளம்தான். ஆங்கில அறிவை அதிகம் பெற்றிருக்கும் முதன்மையான ராஜ்யமும் கேரள மாநிலம்தான்...!'' என்று பெருமிதத்துடன் அடுக்கினார்.

அவர் உற்சாகத்தில் குறுக்கிட்டு, ''பொதுவாக மலையாளிகள் தமிழர்களை வெறுக்கிறார்களா? அந்தக் காழ்ப்புணர்ச்சி இருக்கிறதா?'' என்று கேட்டேன்.

''இல்லை, இல்லை. இல்லவே இல்லை. கேரள மக்கள் எங்கு சென்றாலும் அங்குள்ள மக்களுடன் இணைந்து வாழும் அரிய பண்பை, பூரணமாகப் பூண்டவர்கள். அதாவது, கேரள மக்களின் (Cosmopolitan Views)ஐச் சொல்கிறேன்'' என்று பரவசத்துடன் கூறினார் திரு கோவிந்தப் பிள்ளை.

பிறகு கேரள மாநிலத்தின் அரிசிப் பற்றாக் குறையைப் பற்றிக் கேட்டேன்.

என்றைக்கும், எப்பொழுதுமே கேரளத்தில் அரிசிப் பற்றாக்குறை இருந்து வருவது தான். அதை எதிர்த்துப் பல திட்டங்கள் வகுத்துச் செயல் முறையில் கொண்டு வரப் பெரு முயற்சி செய்து வருகிறோம். அம் முயற்சி பலன் அளிக்கத் தொடங்கினால் இந்தப் பற்றாக்குறை தீர்ந்து போகலாம் என்ற கருத்தைத் தெரிவித்தார். பிறகு பொது ஜனத் தொடர்பு அதிகாரி திரு கே. அசோகனுக்கு டெலிபோன் செய்து என் வருகையைத்

1. கேரளத்துக்கு எழிலூட்டும் உப்பங்கழி.
2. இடுக்கி அணைக்கட்டு.
3. குட்ட நாட்டில் நெல் விளைச்சல்.



தெரிவித்து எனக்குத் தேவையான எல்லாத் தகவல்களையும் கொடுத்து உதவுமாறு கூறினார்.

பி. ஆர். ஓ. திரு அசோகன் அவர் இலாகாவின் பிரசுரங்களைக் கொடுத்து, ''கேரளம் பற்றிய அனைத்து விவரங்களையும் இவை புள்ளி விவரங்களுடன் உங்களுக்கு எடுத்துச் சொல்லும்'' என்றார்.

(அவர் கொடுத்த புள்ளி விவரங்களைக் கண்டு நானே குழம்பினேன். அவற்றை எழுதி உங்களையும் குழப்பத் தயாராயில்லை!)

நிலமற்ற ஏழைக் கிராம வாசிகளுக்காக ஒரு லட்சம் வீடுகளைக் கட்டித் தரும் ஒரு மாபெரும் திட்டத்தைக் கேரள அரசு மேற்கொண்டிருக்கிறது. ஒரு வீட்டுக்கு, நிலம், மற்றத் தளவாடங்கள் உட்பட, மூவாயிரம் ரூபாய் விலை என்று நிர்மாணிக்கப்பட்டிருக்கிறது. இதுவரையில் முப்பதாயிரம் வீடுகள் இத்திட்டத்தின் கீழ்க் கட்டி முடிக்கப்பட்டிருக்கின்றன. மேற்படி திட்டத்துக்காக ரூபாய் முப்பது கோடி ஒதுக்கப்பட்டிருக்கிறது. இந்தக் கிராமப்புற வீடுகள் கட்டும் திட்டத்துக்கு மத்திய அரசு ரூபாய் எட்டுக் கோடி நிதி உதவி வழங்கியிருக்கிறது.

கிராமப்புறத்தில் குடிநீர் வசதி இன்னும் சரியான நிலையில் அமையவில்லை. (அவ்வளவு மழை வளம் நிறையப் பெற்றிருந்தும்கூட!) இப்பொழுது இருக்கும் அரசு அதற்கான அரும் பெரும் முயற்சிகளில் ஈடுபட்டு, பத்து லட்சம் பேர்களுக்குக் குடிநீர்த் திட்டம் என்ற ஒரு மாபெரும் திட்டத்தை மேற்கொண்டு துரிதமாகச் செயலாற்றி வருகிறது. 1975ம் ஆண்டு இந்தத் திட்டம் பூர்த்தியடையும் என எதிர்பார்க்கப்படுகிறது. இந்த ராட்சதத் திட்டத்துக்கு முப்பத்தொன்பது கோடி ரூபாய் ஆகுமெனக் கணக்கிடப்பட்டிருக்கிறது. இந்தத் திட்டம் நிறைவேற்றப்பட்டு விட்டால் கேரள ராஜ்யம் தலை சிறந்த ராஜ்யமாகி விடும் என்று மகிழ்ச்சி பொங்கக் கூறினார், பொதுஜனத் தொடர்பு அதிகாரி திரு அசோகன்.

இன்னும் மீன் வளத்தைப் பெருக்கும் திட்டம், பாசன வசதியைப் பெருக்கும் திட்டம், ஆண்டுதோறும் ஏற்படும் வெள்ளச் சேதங்களைத் தடுக்கும் திட்டம், கிராமங்கள்தோறும் மின்சார வசதிகளைப் பொருத்தும் திட்டம், போக்குவரவுகளை வசதியாக அதிகப்படுத்த ஒரு புது அபிவிருத்தித் திட்டம், கடைசியாக, வேலைவாய்ப்புக்களை அதிகப்படுத்தும் ஒரு விசேஷத் திட்டம் ஆகிய பல்வேறு திட்டங்களைப் பற்றி யெல்லாம் அச்சிட்ட அறிக்கைகளில் விவரமாகப் பார்த்தேன்.

முதலிலேயே திரு அசோகன் அவர்கள் ''*Our plan figures will speak to you*'' என்று சொல்லி விட்டபடியால் அவர் பேசாமல் மௌனமாக என்னைப் பார்த்துக்கொண்டிருந்ததைக் கண்டு நான் வியப்படையவில்லை. 'அச்சாகியுள்ள திட்டங்கள் இருக்கட்டும், நிறைவேறியுள்ள திட்டங்களைப் பற்றிச் சொல்லுங்கள்' என்று கேட்க எண்ணித் தலை நிமிர்ந்து அவரைப் பார்த்தேன்.

'' திட்டங்களின் வெற்றியின் அளவை அறிய வேண்டுமானால், இதோ இருக்கிறது சாதனைப் பட்டியல், புள்ளி விவரங்களுடன்!'' என்று புன்னகையுடன் கூறி கோப்புகளை எடுத்து என் முன் வைத்தார். நான் அயர்ந்து போனேன். திட்டமிட்டே என்னை வென்று விட்டார்!

விவசாயம்தான் இம்மாநிலத்தின் முக்கியமான தொழில். அயல்நாட்டுச் செலாவணியை அள்ளித் தரும் ஏலம், ரப்பர், டீ, காப்பி ஆகியவை இம்மாநிலத்தின் வளத்துக்குப் பெரிதும் காரணமாயிருக்கும் (*Cash Crops*) பணம் கொழிக்கும் பயிர்கள். கேரளத்தில் நெல்லும் விளைகிறது என்றாலும் இது என்றைக்குமே அரிசிப் பற்றாக்குறை மாநிலம்தான். அதனால்தான், கள்ளக் கடத்தல் பொருள்களில் அரிசி தலைமை வகிக்கிறது. ரயில், ரஸ்தா இரு வழிகளிலும் ஏராளமான அரிசி கடத்தப்படுகிறது. கேரள அரசு இக்கள்ளக் கடத்தலைக் கடுமையாகத் தடுத்தும் அது நடந்துகொண்டுதான் இருக்கிறது!

செக்ரடேரியட் அலுவலகக் கட்டடத்தின் முன் வாசலையொட்டி ஒரு கூட்டம் ஒரு திட்டமிட்ட அறப் போரில் இறங்கியிருந்தது. அவர்களைப் பார்த்தால் தொழிலாளிகள் மாதிரி தோன்றவில்லை. அங்கிருந்த ஒரு டாக்ஸி டிரைவரிடம் அவர்களைப் பற்றி விசாரித்தேன். அவர்கள் பட்டதாரி உபாத்தியாயர்கள் என்றும், தங்கள் கோரிக்கைகளை நிறைவேற்றிக் கொள்ள வந்திருக்கிறார்கள் என்றும் தெரிய வந்தது. ''இது தினசரி நடக்கும் நிகழ்ச்சி. இங்கு ஏதாவது ஒரு 'தர்ணா' நடந்து கொண்டிருக்கும்!'' என்று அந்த டாக்ஸி டிரைவர் கூறியதும், நான் ''மக்களுக்கு அத்தனை குறைகளா?'' என்று சிறிது வியப்புடனும் சிறிது அதிருப்தியுடனும் கேட்டேன். என் உள்ளக் கிடக்கையை நன்றாய்ப் புரிந்து கொண்டுவிட்ட டாக்ஸி டிரைவர், ''அதில்லை, ஸார்! இந்நாட்டு மக்களின் விழிப்புணர்ச்சியைக் காட்டுகிறது. எங்குதான் குறைகள் இல்லை? தங்கள் குறைகளைத் தீர்த்துக் கொள்ளப் புரட்சியை மேற்கொண்டுதான் ஆகவேண்டும் என்ற முடிவுடன் சத்தியாக்கிரகத்தில் ஈடுபடுகிறார்களே, அதைத்தான் நீங்கள் பாராட்ட வேண்டும்'' என்று மிடுக்குடன் கூறினார்.

பிறகு, மெதுவாக 'மண்ணின் மைந்தர்' (*Sons of the soil*) களுக்கே வேலை வாய்ப்பு என்ற கருத்து பற்றியும், மலையாளி — தமிழர் பகை உணர்ச்சி பற்றியும் அவரிடம் பேசினேன். அவர் விஷயம் தெரிந்தவர் என் பகைத் தம் பதிலின் மூலம் நன்கு தெரிவித்துவிட்டார்.

''தனக்கு மிஞ்சித்தானே தானம், என் ஸார்? *Charity begins at home* இல்லையா?''

டிரைவர் ஒரு பட்டதாரி என்பதை அறிந்ததும் அவரது ஆங்கில அறிவைக் கண்டு நான் அயர்ந்து போகவில்லை.

''மேலும், மலையாளிகள் — தமிழர் விரோதத்தைக் கிளப்பி விட்டதே தமிழக அரசு

தானே! தமிழர் படை என்ற ஓர் அமைப்பை நிறுவி, உங்கள் நாட்டில் மலையாளப் படங்களைக் காட்ட விடாமல், திரையைக் கிழித்து ஆர்ப்பாட்டம் செய்தார்களே, அதன் காரணமாகத்தான் இங்கும் சிறிது எதிர்ப்பு உணர்ச்சி கிளம்பியது. அதுவும் நிரந்தரமானதல்ல. எதிர் அடிக்குப் பதில் அடிதான்!'' என்ற டிரைவரின் பேச்சு என்னை மேலும் பேசவிடவில்லை.

செகரடேரியட் என்றால் எங்கும் ஒரே மாதிரிதான் போல் இருக்கிறது. முதல் அமைச்சரின் அந்தரங்கக் காரியதரிசியைக் கண்டு பேசுவதற்குச் சுமார் இரண்டு மணி நேரம் காத்திருந்ததைத்தான் சொல்லுகிறேன். ஆனால் அதிலும் ஒரு திருப்தி. தமிழகத்துக்கும் கேரளத்துக்கும் காரியதாமதத்தில் இருக்கும் ஒற்றுமை அளித்த திருப்தி அது!

செக்ரட்டேரியட்டை விட்டு வெளியே வந்ததும் நண்பர் கோலப்பனுடன் ஒரு சாப்பாடு ஹோட்டலில் நுழைந்தேன். இலையில் பரிமாறப்பட்ட சாதத்தின் ஒவ்வொரு பருக்கையும் போர்க்கோலம் பூண்டு எழுந்து என்னுடன் போருக்குத் தயாராயிருந்தது!

''சாதம் கொட்டை கொட்டையாக இருக்கிறதே என்று பார்க்கிறீர்களா? இங்கெல்லாம் சாதம் அப்படித்தான் இருக்கும். தைரியமாகச் சாப்பிடுங்கள்'' என்று எனக்குத் துணிச்சலூட்டினார் நண்பர் கோலப்பன். அப்புறம் என்ன? சரணாகதிதான்!

நண்பர் கோலப்பன் மூலம் கேரளத்தைப் பற்றிய பல விவரங்களை அறிந்து கொண்டேன். கேரள நாட்டில் பல பிரச்னைகள். உணவுப் பற்றாக்குறை ஒரு பிரச்னை; அதிக மழை ஒரு பிரச்னை; மக்களின் அதிகக் கல்வி அறிவுகூட ஒரு பிரச்னை; விபரீத மக்கள் தொகைப் பெருக்கம் ஒரு பிரச்னை, அரிசிப் பற்றாக்குறை ஒரு பிரச்னை. இத்தனை பிரச்னைகளுக்கும் சரியான முறையில் தீர்வு காண்பது மிக மிகப் பெரிய பிரச்னை! ஆகவே, இப்படிப் பிரச்னை மயமான கேரளத்தில் ஒரு சாசுவதமான அரசை நிறுவுவதே ஒரு பிரச்னை! இங்கு இதுவரையில் ஒரு நிலையான அரசு நீண்ட நாட்களுக்கு இருந்ததே இல்லை. திரு அச்சுத மேனன் அரசு அந்த முறையில் பாராட்டுக்குரியது. மக்களின் நன்மதிப்பைப் பெற்ற அரசாக விளங்குகிறது.

கேரளத்தில் இல்லாதது மொழி எதிர்ப்பு. பள்ளிக்கூடங்களில் மலையாளம் தவிர, தமிழ் சம்ஸ்கிருதம், ஹிந்தி, ஆங்கிலம் ஆகியவை கற்பிக்கப்படுகின்றன. கேரளத்தில் அதிகமாக உள்ளது நீர்வளம். ஜனத்தொகையில் அதிகமாக உள்ளவர்கள் பெண்கள்!

திருவனந்தபுரத்தில் ஓடும் அரசு டவுன் பஸ்களில் மிகவும் நெருக்கடி அதிகம். ஏறுவதற்கும் இறங்குவதற்கும் ஒரே வழிதான். இது போதாக் குறைக்கு பஸ்களில் ரூட் நம்பர் கிடையாது. பஸ் வந்து நின்றதும் மக்கள் முட்டி மோதி அடித்துக் கொண்டு ஏறுகிறார்கள். பஸ்ஸில் போகும் பிரயாணிகளைப் பார்த்து ''ஈ பஸ் வழுதக்காடு போமோ?'' ''ஈ பஸ் கரமனே போமோ?'' என்று கேட்டு ஏறவேண்டியிருக்கிறது. பல்லவன் போக்குவரத்தின் பெருமையை அறிந்துகொள்ளத் திருவனந்தபுரம் வரையில் போக வேண்டியிருக்கிறது!

இப்பொழுது கேரள மாநிலத்தை எதிர்நோக்கியுள்ள மிகப் பெரிய பிரச்னை இடுக்கி பிரதேசத்தில் வெள்ளத்தினால் ஏற்பட்டிருக்கும் பயங்கர உயிர்ச் சேதமும் பொருள் சேதமும்தான். இவ்விரண்டு சேதங்களின் நஷ்டத்தை உத்தேசமாகக்கூடக் கணக்கிட்டு அறிய முடியவில்லை. அவ்வளவு பயங்கரமான சேதம். இயற்கையின் உற்பாதத்தை எதிர்த்து நிற்கும் மனோதிடத்தைக் கேரள மக்களுக்கு ஆண்டவன் அருள வேண்டும்.

நீர் வளம், நிலவளம், மலைவளம், வனவளம், கலைவளம் ஆகிய எல்லா வளங்களிலும் சிறந்து விளங்கும் மாநிலம், கேரளம். பாரதத்தின் அனைத்து மாநிலங்களிலும், கேரளத்தில் எழுத்தறிவு பெற்ற மக்கள் அதிகம். எந்தத் தொழிலைச் செய்தாலும் ஏற்றமே என்னும் உயர்ந்த கருத்தைக் கொள்கையாகக் கொண்டு உழைக்க அஞ்சாத கேரள மக்கள், உலகத்து நாடுகள் எங்கணும் பரவிப் பெருகியிருப்பதில் சிறிதும் வியப்பில்லை.

## 7. அவமானத்துக்கு மேல் அவமானம்!

வக்கீல் சங்கக் கட்டிடத்திலிருந்து வெளியே வந்த கருணாகரன் தம்முடைய காரை நோக்கிச் சென்றார். காருக்குப் பக்கத்தில் அவருக்காகக் காத்துக் கொண்டிருந்த புரோக்கர் ஆறுமுகம், அவரைக் கண்டதும் மீசையைத் தடவிக் கொண்டே ஓர் அசட்டுச் சிரிப்பைச் சிரித்தான்.

''என்னப்பா?'' என்று கேட்டுக்கொண்டே காரின் முன் கதவைத் திறந்து உள்ளே அமர்ந்தார் கருணாகரன்.

''வேலம்பட்டி கேஸுக்கும், நத்தம் கேஸுக்கும் இன்னும் பணம் வாங்கவில்லை'' என்று கூறித் தலையைச் சொறிந்தான், ஆறுமுகம்.

''ஓ... இன்னும் வாங்கவில்லையோ? இத்தனை நாட்கள் எங்கே போய் விட்டாய்?'' என்று கூறிக் கொண்டே நூறு ரூபாயைப் பர்ஸிலிருந்து எடுத்துக் கொடுத்தார், கருணாகரன். பணத்தை எண்ணிய ஆறுமுகம், அவரைப் பார்த்துக் குழைந்து சிரித்தான். ''ரொம்பக் குறைத்து விட்டீர்களே!'' என்றான்.

''எப்போதும் போல்தான் கொடுத்திருக்கிறேன்'' என்றார் கருணாகரன்.

''இந்த இரண்டு கேஸையும் இங்கே கொண்டு வர ரொம்பச் சங்கடமாகிவிட்டது.



திருடர்கள்

ரா.சு.நல்லபெருமாள்

இரண்டு வழக்குகளும் வக்கீல் ஆவுடையப்ப பிள்ளையிடம் போயிருக்க வேண்டியது. நான் தான் கஷ்டப்பட்டுக் கலைத்து இங்கே கொண்டு வந்தேன். அதற்காக அலைந்ததற்கே எனக்கு இருபது ரூபாய்வரை செலவு ஆகிவிட்டது'' என்றான் ஆறுமுகம்.

''சரி, இந்தா'' என்று ஐம்பது ரூபாயை எடுத்துக் கொடுத்தார் கருணாகரன். அதைத் திருப்தியோடு வாங்கிக் கொண்டான் ஆறுமுகம்.

''மருதமுத்து கொலைக் கேஸ் என்ன ஆயிற்று? இன்னும் ஆள் ஒருவனும் வரவில்லையே?'' என்று கேட்டார் கருணாகரன்.

''அது, ஆவுடையப்ப பிள்ளையிடம் போய் விட்டதாகக் கேள்வி.''

''என்னப்பா, விட்டு விட்டாயே.''

''எவ்வளவோ முயற்சி பண்ணிப் பார்த்தேன். செலவு அதிகமானாலும் கூடப் பிள்ளையிடம் தாம் கேஸை ஒப்படைக்கப் போவதாகச் சொல்லி விட்டார்கள். இது போனால் போகட்டும். காடுபட்டி கொள்ளை கேஸ் என்னிடம் தான் சிக்கியிருக்கிறது. ஒன்பது குற்றவாளிகள். தலைக்கு இருநூறு ரூபாய் தரச் சொல்கிறேன்.''

''சரி, அதையும் விட்டு விடாதே.''

''இப்போது காடுபட்டிக்குத்தான் புறப்பட்டுக் கொண்டிருக்கிறேன்'' என்றான் ஆறுமுகம். மீசையைத் தடவிக்கொண்டான்.

கருணாகரன் இன்னொரு ஐந்து ரூபாய் நோட்டை எடுத்துக் கொடுத்து, ''பஸ் செலவுக்கு வைத்துக் கொள்'' என்றார். ஆறுமுகம் மலர்ந்த முகத்தோடு பணத்தைப் பெற்றுக் கொண்டு சென்றான்.

கருணாகரனின் தொழில் தந்திரங்களில் இந்தப் புரோக்கர் முறையும் ஒன்று. தமக்கென்று அந்த மாவட்டம் முழுவதும் மூன்று புரோக்கர்கள் வைத்திருந்தார். அலைந்து திரிந்து அவர்கள் கொண்டு வரும் வழக்குகளுக்காக அவர் தாராளமாகவே கைக்கூலி கொடுத்தார். புரோக்கர் விஷயத்தில் சிக்கனமோ, ஏமாற்றோ இருக்கக் கூடாது என்னும் தொழில் இரகசியத்தை நன்கு அறிந்திருந்தார். அதனால் புரோக்கர்கள் அவரிடம் விசுவாசமாக இருந்தார்கள்.

புரோக்கர் ஆறுமுகத்தை அனுப்பி விட்டு, காரை ஆளும் கட்சியின் மாவட்டத் தலைவரின் வீட்டை நோக்கிச் செலுத்தினார் கருணாகரன்.

கல்லூரிப் பக்கத்தில் கார் வந்ததும் காலையில் நடைபெற்ற சம்பவம் நினைவில் எழுந்து கோபத்தைக் கிளறியது. அவருக்கு மிகுந்த ஏமாற்றமும், அவமானமும் ஏற்பட்டிருந்தன.

''சே! ஒரு காலேஜ் பிரின்ஸிபால், என்னை மதிக்கவில்லை என்றால் ...'' — கருணாகரனின் வாய், கோபத்தால் முனகியது. காருக்குள்ளிருந்த டிரான்ஸிஸ்டர் ஸ்டீரியோ ரேடியோவைப் பாட வைத்தார். அதிலிருந்து கர்நாடக சங்கீதம் கேட்கவே, அதை நிறுத்தி விட்டு, டிரான்ஸிஸ்டர் டேப் ரிக்கார்டரைப் பாட வைத்தார். ஏதோ ஒரு சினிமாப் பாட்டு கேட்கத் தொடங்கியது. கார், கல்லூரியை நெருங்கி வந்ததும் கருணாகரனின் பார்வை அந்தக் கல்லூரியின்மீது பதிந்தது. அந்தக் கல்லூரியை இடித்துத் தகர்த்து விட வேண்டும் என்னும் கோப வெறி அவருள் எழுந்தது.

''சே! எவ்வளவு அவமானம். நல்ல வேளை, நாலு பேருக்கு முன்னால் இந்தப் பிரின்ஸிபால் அப்படிச் சொல்லவில்லை. போனில் பேசப் போய்த் தப்பித்தோம்'' என்று முனகியபடியே மீண்டும் ஒருமுறை அந்தக் கல்லூரியை முறைத்துப் பார்த்தார்.

கருணாகரன், நான்கு மாணவர்களுக்கு அந்தக் கல்லூரியில் சேர்வதற்காகச் சிபாரிசுக்



கடிதம் கொடுத்து அனுப்பியிருந்தார். பொறிகை, கருணாகரனிடமிருந்து வந்திருப்பதை அறிந்த கல்லூரித் தலைவர், அந்த நால்வரையும் கல்லூரியில் சேர்க்க மறுத்து விட்டார். புரட்சிக் கட்சித் தலைவராகிய தமது சிபாரிசை ஏற்கவில்லையே என்ற ஏமாற்றம் கருணாகரனுக்கு. நாற்பது ஆண்டுகளாகவே அந்தக் கல்லூரியின் மீது அவருக்கு வெறுப்பும், கோபமும் இருந்து வந்தன. அந்தக் காலத்தில், அந்தக் கல்லூரி அவரை மாணவனாகச் சேர்த்துக் கொள்ள மறுத்து விட்டது. அந்த ஏமாற்றம் கருணாகரனின் மனத்தை விட்டு நீங்கவே யில்லை. கருணாகரனின் நிறம், யானையை ஒத்திருந்தது போல் குணமும் யானையை ஒத்திருந்தது. பகைமையை மறந்து விடாமல், நெஞ்சிலேயே தேக்கி வைத்திருக்கும் குணம்.

அன்று காலையில் கல்லூரித் தலைவருக்கு அவர் போன் செய்த போது, ''யார்? எங்கிருந்து?'' என்று கேட்டார் கல்லூரித் தலைவர்.

''கருணாகரன்'' என்று அழுத்திச் சொன்னார் கருணாகரன்.

''கருணாகரனு....? எங்கிருந்து பேசுகிறீர்கள்? எந்தக் கருணாகரன்?''

கருணாகரனுக்குக் கோபம் தலைதூக்கியது. புரட்சிக் கட்சித் தலைவரைத் தெரியாதது போல் பேசுகிறாரே பிரின்சிபால் என்ற எரிச்சல்.

''புரட்சிக் கட்சித் தலைவர் கருணாகரன் பேசுகிறேன்.''

''என்ன வேண்டும்?''

''உங்களை எப்போது சந்திக்கலாம்?''

''என்ன காரியமாக?''

''நேரில் சந்திக்க வேண்டும்.''

''இப்போது, அட்மிஷன் நடந்து கொண்டிருக்கிறது. நேரமில்லை'' என்றார் தலைவர்.

கருணாகரனுக்குக் கோபத்தால் கண்கள் சிவந்தன.

''அட்மிஷன் விஷயமாகத்தான் பேச வேண்டும். நான் அனுப்பிய மாணவர்களை நீங்கள் சேர்த்துக் கொள்ளவில்லையாமே?''

''யாரெல்லாமோ அனுப்பி வைக்கிறார்கள். இதென்ன சத்திரமா, கண்டவனையெல்லாம் சேர்த்துக் கொள்வதற்கு?'' என்றார் பிரின்சிபால்.

''நீங்கள் எந்த அடிப்படையில் மாணவர்களைச் சேர்க்கிறீர்கள்?'' என்று கோபத்தை அடக்கிக் கொண்டு கேட்டார் கருணாகரன்.

''அதெல்லாம் இப்போது சொல்லிக் கொண்டிருக்க நேரமில்லை.''

''புரட்சிக் கட்சித் தலைவர் என்ற முறையில் கேட்கிறேன்'' — கோபத்தில் இரைந்தார் கருணாகரன்.

''இந்தக் கல்லூரிக்கும் புரட்சிக் கட்சிக்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை. என் நேரத்தை வீணாக்க வேண்டாம்'' என்று கூறிக் கல்லூரித் தலைவர், போனை வைத்து விட்டார்.

கருணாகரன், அவமானத்தால் புழுங்கினார். ''ஏற்கனவே பட்ட பாடு போதாது போலிருக்கிறது'' என்று முனகினார்.

ஆறு மாதங்களுக்கு முன் அந்தக் கல்லூரி மாணவர்கள், தங்களுக்கு ஒரு யூனியன் வேண்டுமென்று கோரிப் போராட்டம் நடத்தினார்கள். அரசியல் கட்சிகள் அதைத் தங்களுக்குச் சாதகமாகப் பயன்படுத்த முயன்றன. புரட்சிக் கட்சிதான் அதில் தீவிரப் பங்கு கொண்டது. எந்த இடத்தில் கலவரமோ குழப்பமோ நிகழ்ந்தாலும் நிச்சயமாக அதில் புரட்சிக் கட்சியின் பங்கு இருக்கும். கருணாகரனின் தூண்டுதலின் பேரில் பல ரௌடிகள், மாணவர்கள் கூட்டத்தில் கலந்து கொண்டு, கல்லூரியின் மீது படையெடுத்துக் கல்லூரியைக் கொள்ளையடித்து விட்டார்கள். அந்தக் கொள்ளையில் கல்லூரிக்குக் கிட்டத்தட்ட எண்பதினாயிரம் ரூபாய் நஷ்டம் ஏற்பட்டு விட்டது. கல்லூரியில் நடைபெற்ற கொள்ளைக்கு முழுப்பொறுப்பும் கருணாகரன்தான் என்பதைப் புரிந்து கொண்ட கல்லூரித் தலைவர், கருணாகரனின் சிபாரிசை ஒதுக்கியதில் வியப்பேதும் இல்லை.

மற்றக் கட்சித் தலைவர்களையும் சந்தித்து அந்தக் கல்லூரிக்கு ஒரு பாடம் கற்பிக்க வேண்டும் என்று முடிவு செய்திருந்தார் கருணாகரன். அது விஷயமாகத்தான் அப்போது ஆளும் கட்சியின் மாவட்டத் தலைவரைப் பார்க்கப் போய்க் கொண்டிருந்தார்.

ஆளும் கட்சியின் மாவட்டத் தலைவரான தேன்மொழியனின் வீட்டில் அப்போது கூட்டமே இல்லை. உள் அறையில் தேன்மொழியனுடன் கட்சியைச் சேர்ந்த ஒரு பிரமுகர் பேசிக் கொண்டிருந்தார். அவரைப்

பார்த்தால், கட்சியின் வட்டச் செயலாளரைப் போலிருந்தது. அவருக்குப் பக்கத்தில் இன்னொரு பிரமுகர் அமர்ந்திருந்தார், அவர் ஒரு கண்டிராக்டர்.

''முதல்வரிடம் முன்பே சொல்லி விட்டேன். எல்லாம் நடக்கும்'' என்றார் தேன்மொழியன்.

''இன்னும் ஆர்டர் வரவே இல்லை. நீங்கள் இன்னொரு தடவை போய் மந்திரியைப் பார்த்துக் காரியத்தை முடிக்க வேண்டும்'' என்றார் கண்டிராக்டர்.

''இன்னும் ஒரு வாரத்துக்கு என்னால் எங்கும் போக முடியாது. இந்த வீட்டுக் காம்பௌண்டுச் சுவருக்கு வேலை ஆரம்பித்தாகி விட்டது. பணத்துக்கு ஓடிக் கொண்டிருக்கிறேன்'' என்றார், தேன்மொழியன். அப்போது கட்சிப் பிரமுகர், கண்டிராக்டரை அர்த்த புஷ்டியுடன் பார்த்தார். அதைப் புரிந்து கொண்ட கண்டிராக்டர் ''அண்ணே! நீங்கள் கவலைப்படாதீர்கள்.. காம்பௌண்டு சுவர் வேலை தானாக நடக்கும். நீங்கள் நாளைக்குப் புறப்படுங்கள். மந்திரியைப் பார்த்துக் காரியத்தை முடித்து விட்டு வாருங்கள்'' என்றார்.

''இவ்வளவு வேலையை இங்கே விட்டுவிட்டு...'' என்று இழுத்தார், தேன்மொழியன்.

''அந்தக் கவலையே உங்களுக்கு வேண்டாம். நான்தான் சொல்லி விட்டேனே, காம்பௌண்டு சுவர் வேலை தானாக நடக்கும். என் பொறுப்பு'' என்றார் கண்டிராக்டர், அழுத்தமாக. தேன்மொழியன் ஓர் அசட்டுச் சிரிப்பை உதிர்த்தார். சிறு மீசையைத் தடவிக் கொண்டார்.

''பின்னே என்ன, நாளைக்கே புறப்படுங்கள். நானும் கூட வருகிறேன். சேர்ந்து போய்க் காரியத்தை முடித்து விடலாம்'' என்றார் கட்சிப் பிரமுகர்.

''ஆமாம், நீங்கள் இரண்டு பேரும் போய் விட்டு வாருங்கள். காம்பௌண்டு சுவரைப் பற்றி நீங்கள் கவலையே படவேண்டாம்''என்று கூறிக் கொண்டே ஒரு கவரைத் தேன்மொழியனிடம் நீட்டினார், கண்டிராக்டர். தேன்மொழியன் அதை வாங்கி மேஜைக்குள் போட்டு விட்டு,''சரி நாளைக்குப் புறப்பட வேண்டியதுதான்'' என்று சங்கடத்தோடு சம்மதித்தார்.

அறைக்குள்ளிருந்து கட்சிப் பிரமுகரும், கண்டிராக்டரும் வெளியே வந்ததும் கண்டிராக்டர் கேட்டார்: ''நீங்களும் கூடப்



போக வேண்டுமா? நீங்களும் வீணாக அலைவானேன்?''

''அண்ணனைத் தனியாகவே அனுப்பக் கூடாது. மந்திரியிடம் அழுத்திச் சொல்ல மாட்டார்கள். கூட ஆள் இருந்தால்தான் காரியம் நிறைவேறும்'' என்றார் கட்சிப் பிரமுகர். அவர்கள் இருவரும் காரில் ஏறிய சமயத்தில்தான் கருணாகரன் அங்கு போய்ச் சேர்ந்தார்.

கருணாகரன், வராந்தாப் படிகளில் ஏறிக் கொண்டிருந்த போது தென்மொழியன், கண்டிராக்டர் கொடுத்த கவரைப் பிரித்து அதற்குள்ளிருந்த பணத்தை எண்ணி முடித்திருந்தார். ஆயிரத்து ஐந்நூறு ரூபாய் இருந்தது. மனத்துக்குள்ளேயே கணக்குப் போட்டார். இது ஓர் ஆயிரத்து ஐந்நூறு, காம்பௌண்டு செலவுக்கு எப்படியும் இரண்டாயிரம் ஆகும். ஆக மூவாயிரத்து ஐந்நூறு மொத்தம். கண்டிராக்டருக்குக் கிடைக்கப் போகிற லாபம் முப்பதினாயிரம். சரி சரி, நமக்கு வந்தது போதும். ஒரு வகையாக இந்த மாதிரியே பங்களா முழுவதையும் கட்டி முடித்தாகி 'விட்டது. பட்டணத்துக்குப் போய் விட்டு வந்ததும் கிரஹப்பிரவேசம் நடத்தினால் குறைந்தது ஐயாயிரமாவது பரிசுகளாக வராதா....?

''என்ன பலத்த யோசனை?'' என்ற குரலைக் கேட்டுத் திடுக்கிட்டு வாசலைப் பார்த்தார் தென்மொழியன். சிரித்தவாறே கருணாகரன் அறைக்குள் வந்து கொண்டிருந்தார்.

புரட்சித் தலைவரைக் கண்டதும் தென்மொழியன் முதலில் திகைத்தார். கருணாகரன் வருகிறார் என்றால், ஏதாவது குழப்பமோ கலவரமோ ஏற்படும் என்பது தென்மொழியனின் அனுபவம். கருணாகரன், கல்லூரித் தலைவரின் அகம்பாவத்தைச் சொன்னதும் தான் தென்மொழியனுக்கு நிம்மதி ஏற்பட்டது. தம்முடைய சிபாரிசைப் பிரின்ஸிபால் ஏற்கவில்லை என்பதை மட்டும் சொன்னார் கருணாகரன். தமக்கு போன் மூலம் ஏற்பட்ட அவமானத்தைச் சொல்லவில்லை.

''நாம் இந்த விஷயத்தில் என்ன செய்து விட முடியும்? அதுவோ தனியார் கல்லூரி. ஆறு மாதங்களுக்கு முன் கல்லூரியில் நடைபெற்ற கொள்ளைக்குப் பிறகு அரசியல் கட்சி எதையும் மதிப்பதில்லை என்றே முடிவு செய்து விட்ட மாதிரித் தெரிகிறது'' என்றார் தென்மொழியன், மீசையைத் தடவிக் கொண்டே.

''ஏன் உங்களுக்கும் மறுத்து விட்டாரா?'' என்று வியப்புடன் கேட்டார் கருணாகரன்.

''நான் மூன்று பேருக்குச் சிபாரிசுக் கடிதம் கொடுத்தேன். இன்றுவரையில் அட்மிஷன் கொடுக்கவில்லை.''

''இதைச் சும்மா விட்டுடக் கூடாது சார்!''

''என்ன செய்யலாம்?''

''நாம் எல்லோரும் போய்ப் பிரின்ஸிபாலைச் சந்திப்போம்.''

''சந்தித்து?''

''எந்த முறையில் மாணவர்களைத் தேர்ந்தெடுக்கிறீர்கள் என்று கேட்போம். அரசாங்கத்திடம் அந்தக் கல்லூரி மான்யம் வாங்குகிறது. நமக்குப் பதில் சொல்லித்தான் ஆக வேண்டும்'' என்றார் கருணாகரன்.

''ஒன்று செய்யுங்களேன். நீங்கள் முதலில் பிரின்ஸிபாலைச் சந்தித்துப் பேசிப் பாருங்கள்'' என்றார் தென்மொழியன்.

''சேச்சே. எல்லாக் கட்சித் தலைவர்களும் சேர்ந்தே தான் போக வேண்டும்'' என்று கருணாகரன் சொன்னவுடன் தென்மொழியன், போன் மூலமாக மற்றக் கட்சித் தலைவர்களுடன் தொடர்பு கொண்டார். மற்றவர்களும் சம்மதிக்கவே, கல்லூரித் தலைவரை எப்போது சந்திக்க இயலும் என்பதை அறியக் கல்லூரித் தலைவருக்குப் போன் செய்தார்.

''என்ன விஷயமாகச் சந்திக்க வேண்டும்?'' என்று கேட்டார் தலைவர்.

''உங்களிடம் பேச வேண்டியிருக்கிறது. எல்லாக் கட்சித் தலைவர்களும் சேர்ந்து வருவதாக முடிவு செய்திருக்கிறோம்'' என்றார் தென்மொழியன்.

''என்ன விஷயம் என்பது பற்றி முன்கூட்டியே தெரிந்து கொள்ளாமல் சந்திக்க இயலாது'' என்றார் பிரின்ஸிபால்.

''மாணவர்களைச் சேர்க்கும் விஷயமாக மக்களிடமிருந்து புகார் வந்திருக்கிறது. அது குறித்து.....'' தென்மொழியன் பேசி முடிப்பதற்குள் கல்லூரித் தலைவர் குறுக்கிட்டார்:

''புகார் சொல்லும் மக்கள் என்னிடம் நேரடியாகவே புகாரைச் சொல்லலாம். அதற்கு ஓர் ஏஜண்ட் தேவை இல்லை!''

''அதுபற்றி நாங்கள் உங்களிடம் பேச வேண்டியிருக்கிறது. எப்போது சந்திக்கலாம் ?''

''இது விஷயமாக நான் பேச வேண்டிய அவசியம் இல்லை!''

''அரசாங்கத்திடமிருந்து மானியம் வாங்குகிறீர்கள்'' என்றார் தென்மொழியன், கோபத்தோடு. கை, மீசையைத் தடவியது.

''அரசாங்கம் என்னிடம் விளக்கம் கேட்டால் நான் பதில் சொல்லிக் கொள்வேன். இது விஷயமாக வேறு யாரையும் நான் சந்திக்கத் தயாராயில்லை'' என்று கூறி போனைக் கீழே வைத்து விட்டார், கல்லூரித் தலைவர்.

தென்மொழியனுக்கு அவமானமாயிருந்தது. இந்த அவமானத்துக்குக் காரணம் கருணாகரனின் யோசனையைக் கேட்டது தான் என்பதால் கருணாகரன் மீதே கோபம் வந்தது.

''உங்கள் பேச்சைக் கேட்டு நானும் போன் பண்ணினேனே? என் புத்தியைச் செருப்பால் அடிக்க வேண்டும்'' என்றார் தென்மொழியன்.

''இந்தக் காலேஜ் பிரின்ஸிபாலுக்கா இப்படிப் பயப்படுகிறீர்கள்? ஒரு போராட்டமே ஆரம்பித்து விடலாம் சார்!''

''எதற்குப் போராட்டம்? தம்முடைய சிபாரிசை மதிக்கவில்லை என்பதற்கா? உங்கள் சொல்லைக் கேட்டு அதில் நான் இறங்கினால், என்னைப் பார்த்து ஊர் சிரிக்கும். வேண்டுமானால், இந்தப் போராட்டத்தை உங்கள் கட்சியே முதலில் நடத்தட்டும். என்னை விடுங்கள்'' என்று கூறிக் கைகூப்பியபடியே எழுந்து விட்டார் தென்மொழியன்.

தம்முடைய திட்டம் நிறைவேறவில்லை என்ற ஏமாற்றத்தோடு காரில் ஏறி அமர்ந்தார் கருணாகரன். சீறிக்கொண்டு கிளம்பிய கார், கருணாகரனின் மனத்தின் சீறலைப் புலப்படுத்தியது.

(தொடரும்)

# வளரும் குழந்தைகளுக்கு வாய்ப்பான துணை இன்க்ரிமின்*




வளரும் பருவம்!

SISTAS-INC-4A T

துள்ளித் திரியும் கன்றுப் பருவம், ததும்பி வழியும் சக்தி ...பொங்கிப் பெருகும் பூரிப்பான ஆரோக்கியம்! இது தான் வளரும் பருவம். உடலும் உள்ளமும் ஓங்கி வளரும் இச் சமயத்தில் உங்கள் குழந்தைகளுக்கு இன்க்ரிமின் வழங்கி வாருங்கள். பயனளிக்கும் வைட்டமின்கள், இரும்புச்சத்து, அதி முக்கிய அமினோ அமிலம். வளரும் பருவத்தில் அத்தியாவசிய மான இவை அனைத்தும் அடங்கியது, இன்க்ரிமின் டானிக்.

டாக்டர்களின் நம்பிக்கைக்
பாத்திரமான பெ

சையனமைட் இந்தியா லிமிடெட்டின் ஒரு பி
*அமெரிக்கன் சையனமைட் கம்பெனியின்

# இன்க்ரிமின் டானிக் வளரும் பருவத்தினருக்கு ஒரு வரப்பிரசாதம்!

# மருந்தோபதேசம்

பி.வி.ஆர்.




எனக்கு முன்னால் டாக்டரிடம் போனவர் இன்னும் பேசிக் கொண்டிருந்தார்.

''நேற்று கடைக்குட்டிக்கு நல்ல ஜுரம். ஒரே இருமல். ரெஸ்பிரேட்டரி இன்ஃபெக்ஷன். 104 டிகிரி ஜுரம். ஒய்ஃப் ரொம்பத் துடிச்சுப் போயிட்டா...''

''இன்னிக்கு அழைத்து வந்திருக்கலாமே...?''

''எதுக்கு சார் உங்களுக்குச் சிரமம்? ஜுரத்தைக் குறைக்க அல்ட்ராஜின் ட்ராப்ஸ் கொடுத்தேன். இன்ஃபெக்ஷனை அடக்க டெராமைசின் சிரப்... இருமலுக்கு ஸீட்... காலமேயிருந்து 99 டிகிரியிலேயே நிக்கறது. இன்னிக்கு மூணு வேளை டெராமைசின்....''

டாக்டர் ஒன்றும் பேசவில்லை.

பேசுகிறவர் தொடர்ந்தார்.

''எனக்கு மூணு நாளா ஒரே மந்தம். பசி எடுக்கறதில்லை. கோம்பினைம் எழுதித் தாருங்களேன்... அப்படியே ஏதாவது 'பி' வைடமினும் கொடுங்கள். ஸார்பக்ஸ்–டி நன்னாயிருக்கு. இல்லாமப் போனா பிகோஸூல்ஸ் எழுதுங்கள். ஒய்ஃபுக்கு அஸிடிட்டி ஜாஸ்தியா இருக்கு. குறைச்சலுக்கு ஆல்கலைன் ஸிட்ரேட் வாங்கினேன். ஆல்காஸிம்மும் கொடுக்கலாம், இல்லையா?''

பேச்சு தொடர்ந்து கொண்டே போயிற்று. ஒரு நிலையில் யார் டாக்டர், யார் நோயாளி என்றே புரியவில்லை. டாக்டருக்கு உபதேசம் செய்யும் நோயாளியை நினைக்கும்போது எனக்கே எரிச்சல் வந்தது.

இருபத்திரண்டு ஆண்டுகளுக்கு முன் டாக்டர் குருசாமி முதலியாரைப் பார்க்க என் நண்பரை அழைத்துக் கொண்டு போனேன். தம்முடைய உடம்பின் கோளாறுகளைச் சொல்லி என்னிடம் அழுத அவர் டாக்டரைப் பார்த்ததும் பல்லவி பாட ஆரம்பித்து விட்டார்.

''நீங்க பேசாம இருந்தா நான் கவனிக்கிறேன்'' என்றார் டாக்டர். நண்பர் மௌனமானார்.

பத்து நிமிடங்களுக்குப் பிறகு டாக்டர் கேட்டார்: ''இரத்தச் சோகை. பாக்கு வியாபாரமா?''

நண்பருக்கு ஆச்சரியத்தில் வாய் அடைத்து விட்டது. அவர் பாலக்காட்டில் பாக்கு வியாபாரம் செய்து கொண்டிருந்தார்.

''ஆமாம்.''

''ஒரு ஆறு மாசத்துக்குக் கடையில் வேறு யாரையாவது உட்கார வையுங்கள்... இந்த மருந்தை இரண்டு மாதங்கள் சாப்பிடுங்கள்'' என்றார் டாக்டர்.

இப்போதெல்லாம் எவ்வளவோ பேர் டாக்டருக்கு வேலை கொடுப்பதில்லை. கன்ஸல்டேஷன் ஃபீஸைக் கொடுத்து விட்டு இவர்களே என்னென்ன மருந்துகள் தங்களுக்குத் தேவை என்பதைச் சொல்லி விடுகிறார்கள். மத்திய சர்க்கார் சிப்பந்திகளுக்கான டாக்டர்களில் முக்கால் வாசிப்பேர், கேட்கிற மருந்துகளும் டானிக்குகளும் ஆபத்து இல்லாதவை என்ற காரணத்தினாலோ என்னவோ எழுதியும் கொடுத்து விடுகிறார்கள்.

உடலில் என்ன வியாதி வந்தாலும், டாக்டர் வியாதியின் கொடுமையைக் குறைக்கவும், அதன் விபரீதங்களைத் தடுக்கவும்தான் உதவி புரிகிறார். அவருக்குத் தெரியும் எந்த உடம்பிலிருந்தும் வியாதி ஒரேயடியாய் மறையாது என்று. உடம்புக்கு வரும் ஒவ்வொரு வியாதியும் தன்னுடைய ஓட்டத்தில் எத்தனை நாட்கள் ஓடுமோ அத்தனை நாட்கள் ஓடி அப்புறம் மெல்ல மெல்லத் தணிந்து மறைகிறது.

ஜுரம், வியாதியுடன் உடல் போராடும் போராட்டத்தின் அறிகுறி. இந்த ஜுரத்தை ஒரேயடியாகக் குறைப்பது, இயற்கைக்கு விரோதம். அது உடலைப் பலவீனப்படுத்தும். இது டாக்டர்களுடைய கருத்து. இந்தக் கருத்துக்கு நாம் செவி சாய்ப்பதில்லை. நாமாகவே நமது பயத்தில் ஏதாவது கொடுத்து விடுகிறோம். இருமலும் இதே போல் ஓர் அறிகுறி. எடுத்த எடுப்பில் இருமல் மருந்தைக் குடிக்கக் கை துடிக்கிறதே தவிர, இருமலுக்குக் காரணமான வியாதி என்ன என்பதை அறிய மனம் துடிப்பதில்லை.

இது மாத்திரை உலகம். மாத்திரைகளும் மருந்துக் கடைகளும் மலிந்து கிடக்கிற இந்த நாளில் எத்தனையோ பேர் தங்களுக்குத் தாங்களே டாக்டர்களாகி விடுகிறார்கள். அஸிடிட்டி, மைக்ரேன், லோ பிரஷர், டிஸ்பெப்ஸியா என்று தாங்களே 'டயக்நோஸ்' செய்து கொண்டு டாக்டர்களுக்கும் 'அட்வைஸ்' பண்ணுகிறார்கள்.

இப்படியே போய்க்கொண்டிருந்தால் டாக்டர்களுக்கு அதிக வேலை இருக்காது. நோயாளிகள் மருந்துக் கடைகளுடன் நேரடித் தொடர்பு வைத்துக் கொண்டு விடுவார்கள். அதுவும் இன்று பெருமளவு நடக்கத்தான் செய்கிறது.






# கமலா,75

**(பாரதப் பிரதமரின் அன்னை இருந்திருந்தால் அவருக்குச் சென்ற மாதம் எழுபத்தைந்து வயதானதைக் கொண்டாடி மகிழ்ந்திருப்போம்!)**



சிறுமி கமலா தில்லியில் பிறந்து வளர்ந்தாள். ஆனாலும் அக்காலத்துப் பழக்கப்படி உயர் குடும்பப் பெண்கள் எதற்கும் வெளியே போகக் கூடாது. அவள் தம்பி சாந்தை (சந்தரை)ப் பள்ளிக்கூடம் சேர்த்தார்கள். வீட்டிலேயே அடைந்து கிடப்பது கமலாவுக்குக் கஷ்டமாயிருக்கும். வெளியே போய் விளையாட ஒரு வழி கண்டுபிடித்தாள். தம்பியின் உடைகளை மாட்டிக் கொண்டு கூந்தலைச் சுருட்டி மறைத்துத் தலைப்பாகை அணிந்து, வெளியே ஓடிவிடுவாள் அச்சிறுமி!

காஷ்மீர பிராம்மண குடும்பங்களில் சிறுமியாக இருக்கும்போதே திருமண நிச்சயதார்த்தம் செய்துவிடுவது வழக்கம். நிச்சயதார்த்தம் என்பது பல நாட்கள் நடக்கும் வைபவம். இத்தகைய விழாக்களில் இன்னும் பல திருமண நிச்சயதார்த்தப் பேச்சுக்களும் தொடங்கும்! இப்படிப்பட்ட ஒரு விழாவில்தான் பன்னிரண்டு வயதுக் கமலாவை யாரோ பார்த்துவிட்டு, ஜவாஹருக்கு ஏற்ற ஜோடி என மோதிலால் நேருவுக்குச் சொன்னார்களாம்! ஜவாஹர் தமக்கு மாப்பிள்ளையாக வருவாரா என்று எத்தனையோ காஷ்மீர் குடும்பத்தினர் ஏங்கிய நேரம் அது!

பதின்மூன்று வயதுக் கமலாவின் போட்டோவை இங்கிலாந்தில் மாணவராயிருந்த ஜவாஹர்லால் பார்த்துச் சம்மதம் தெரிவித்தார். மோதிலால் நேருவோ தமது வருங்கால மருமகள் மகனுக்கு எல்லாவிதத்திலும் ஏற்றவளாக இருக்க விரும்பினார். தில்லியிலிருந்து அவள் அலாஹாபாத்துக்கு வந்து அங்கு ஓர் அத்தை வீட்டில் இருந்தாள். நேரு குடும்ப இல்லமான 'ஆனந்த பவனில்' பல விசேஷங்களுக்குச் சென்று பழகினாள்.

இப்போது இங்கிலாந்திலிருந்து திரும்பிய ஜவாஹர்லாலுடன் மோட்டார் காரில் எப்போதாவது சவாரி செய்வதும் உண்டு. ஜவாஹரின் தங்கைகளுக்கு ஆசிரியையான ஆங்கில மாது கமலாவுக்கும் ஆங்கிலப் பாணி மரியாதைகளைக் கற்றுக் கொடுத்தாள்.

தில்லியில் திருமணம். 1916ம் ஆண்டு வஸந்த பஞ்சமி தினம். மணமகன் வயது இருபத்தாறு; மணமகளுக்குப் பதினாறரை. அலாகாபாத்திலிருந்து பிள்ளை வீட்டாரைத் தில்லிக்கு அழைத்து வர ஒரு தனி ரயிலே ஏற்பாடு செய்யப்பட்டது. தில்லியில் பல மாளிகைகளைத் திருமண கோஷ்டிக்கு ஒழித்து விட்டும் போதாமல், 'நேரு திருமண முகாம்' என்று தனி கூடார முகாமே அமைத்துவிட்டார்கள். ஏழு நாட்கள் இரவும் பகலுமாக நடைபெற்றது இந்தத் திருமண வைபவம்.

திருமணமான இருபதாம் மாதம் கமலாவுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. கணவனின் இருபத்தெட்டாம் பிறந்த நாள் பரிசாக. கமலாவின் மாமியார் ஸ்வரூபராணி, "முதல் பேரக் குழந்தை ஒரு பிள்ளையாகப் பிறந்திருக்கலாமே?" என்றார். மாமனார் மோதிலாலோ, "ஆயிரம் பேரப் பிள்ளைகள் சேர்ந்தாலும் இந்தப் பேத்திக்கு ஈடாகமாட்டார்கள்" என்றார்! அந்தக் குழந்தைதான் இன்றைய பாரதப் பிரதமர்!

கமலாவுக்கு எப்போதும் குழந்தை முகம். ஜவாஹரின் பெண்தானோ என்று யாராவது நினைத்துவிடக்கூடும் என்ற அளவுக்குக் குழந்தை முகம். அவளை இந்திராவின் தமக்கை என்றும் சிலர் நினைத்திருக்கிறார்கள்!

கன்னிப் பருவத்திலிருந்தே கமலாவுக்கு ஆடம்பரத்தில் ஆர்வம் இருந்ததில்லை. எளிமை வாழ்வே அவளுக்குப் பிடித்திருந்தது. ஆகவே ஆனந்த பவனத்தின் போக வாழ்வுக்குத் தன்னைச் சரிப்படுத்திக் கொள்ளப் பாடுபட வேண்டியிருந்தது. எனவே சில

ஆண்டுகளில், காந்திஜியின் செல்வாக்கினால் நேரு குடும்பம் உடையிலும், உணவிலும் எளிமைக்கு மாறியபோது கமலா மகிழ்ச்சியே அடைந்தாள்.

மருமகள் மீது மாமனாருக்கு மட்டில்லாத வாஞ்சை. திருமணமான புதிதிலேயே கமலாவுக்கு நரம்புத் தளர்ச்சியும் தலைவலியும் அடிக்கடி தொந்தரவு செய்தன. மோதிலால் தாமே ஒரு ஹோமியோபதி வைத்தியராதலால் அவளுக்குச் சிகிச்சை அளித்தார். ஆனால் அவள் நோயைத் தம்மால் குணப்படுத்த முடியவில்லை என்று ஒப்புக் கொண்டுவிட்டார்!

மனைவியும் குழந்தையுமாக வீட்டில் இருந்தும், தாம் ஒன்றும் சம்பாதிக்கவில்லையே என்று ஜவாஹருக்குக் குறையாக இருந்தது. எந்தச் செலவுக்கும் தந்தையையே எதிர்பார்ப்பதா என்று தயங்கினார். காந்திஜியிடம் இதைப் பற்றிப் பேசினார். ''ஒரு பத்திரிகை நிருபராகிவிடு. அல்லது பல்கலைக் கழகப் பேராசிரியராகிவிடு'' என்று யோசனை சொன்னார் காந்திஜி. அப்போது ஜவாஹர்லால் காங்கிரசின் பொதுச் செயலாளர். 'அந்தப் பதவிக்கே ஒரு சம்பளம் போட்டுக் கொடுத்துவிடலாமே?' என்று யாரோ சொன்னார்கள். ஜவாஹருக்கும் அது சம்மதமாகவே இருந்தது. ஆனால் மோதிலால் ஆட்சேபித்தார். ''பொதுப் பணத்திலிருந்து இவ்வாறு பொதுப் பணிக்குச் சம்பளம் தரக் கூடாது. உனக்கு என்ன? உனக்கும் கமலாவுக்கும் ஓர் ஆண்டுச் செலவுக்கு வேண்டியதை நான் ஒரே நாளில் சம்பாதித்துத் தருகிறேன்'' என்றார் அவர்!

அண்ணிக்கும் நாத்திக்கும் உள்ள உறவிலே சிறு உரசல்கள் எங்கேயும் இருக்கத்தான் இருக்கும் போலிருக்கிறது. சிறையில் இருக்கும் கணவருக்கு எழுதிய கடிதத்தில் கமலாவின் குறை இப்படி வெளிப்படுகிறது: ''ஒவ்வொரு முறையும் உங்களோடு எவ்வளவோ பேச வேண்டும் என்று நினைக்கிறேன். வாய்ப்பே கிடைப்பதில்லை. நீங்கள் இல்லாதபோது இங்கே என்ன நடக்கிறது என்பதைப் பற்றி நீங்கள் ஒரு பக்கத்து விவரங்களை மட்டுமே கேட்கிறீர்கள்....''

1930ம் ஆண்டு காந்திஜி ஒத்துழையாமை இயக்கம் தொடங்கியபோது ஜவாஹர் சிறையில் இருந்தார். பல தேசத் தலைவர்களும் சிறையில் இருந்தார்கள். அப்போது இந்திய வரலாற்றில் ஒரு பெரும் புரட்சியாக, இந்திய மாதர் அணி ஒன்று திரண்டது. கமலா நேரு இந்த அணியின் முன்னணியில் இருந்தார். கமலாவின் உழைப்பும் உற்சாகமும் ஜவாஹருக்கே வியப்பு அளித்தன.

தேசிய இயக்க நாளில் அலாகாபாத் ஜில்லா காங்கிரஸ் தலைவராக இருந்த கமலா, இயக்க வேலைகளை ஆர்வத்துடன் கவனித்தார். காக்கி பைஜாமாவும் குர்தாவும் காந்திக் குல்லாயும் அணிந்து ஆணைப் போல் உடுப்புடன், தினசரி காலையில் கவாத் செய்வார் கமலா. ஆங்கில ஆட்சியை எதிர்க்கும் போரில் — போலீஸ் தடியடித் தாக்குதலையும் ஏற்றார் கமலா. அப்படிப்பட்ட ஓர் ஊர்வலத்தில்தான் உள்ளூர் அரசினர் கல்லூரி மாணவர் பிரோஸ் காந்தி அவரை முதலில் சந்தித்தது. பின்னால், கமலாவின் மறைவுக்குப் பிறகு, அவர் மகள் இந்திராவின் கரம் பிடித்தார் பிரோஸ் காந்தி.

1931 புத்தாண்டு தினத்தில் இந்திரா கைதானார். ஜவாஹரைக் கைது செய்ததைக் கண்டிக்கும் கூட்டத்தில் கலந்து கொண்ட குற்றம். இரண்டு மாதச் சிறைத் தண்டனை கிடைத்தது. மோதிலால் நேரு மரணப் படுக்கையில் இருந்ததால் ஒரு மாதத்திலேயே விடுதலை கிடைத்தது.

சுமார் நான்கு ஆண்டுகள் ஜவாஹர் தொடர்ந்து சிறையில் இருந்தார். கமலாவோ நோய் முற்றிச் சிகிச்சையில் இருந்தார். ஒரு முறை அவர் நிலைமை கவலைக்கிடமாக இருக்கவே அரசாங்கம் ஜவாஹரைத் தாற்காலிகமாக விடுதலை செய்தது. பத்து நாட்களில் சொற்ப குணம் தெரிந்ததும் மீண்டும் அவர் கைதானார்! அரசியலில் ஈடுபடுவதில்லை என்று உறுதி அளித்தால் அவரை விடுதலை செய்வதாக ஜவாஹருக்கு அறிவிக்கப்பட்டது. இது தெரிந்த கமலா கடும் சுரத்தோடு பார்வையாளரை அனுமதிக்கும் நாளில் சிறைக்குப் போய், ''என்ன இது, நான் கேள்விப்படுவது? அப்படி ஒன்றும் உறுதி மொழி தராதீர்கள்!'' என்றார் பேசத் திணறியபடி.

ராமகிருஷ்ண மடத்தில் பற்றுதல் கொண்டிருந்தார் கமலா. ஒரு முறை பேலூர் மடத்தில் சுவாமி சிவானந்தாவைச் சந்தித்தபோது அவரிடம் ஆன்மீக விஷயமாகச் சந்தேகத் தெளிவு பெற்றார். திடீரென்று அவரிடம் தீட்சை பெற்றுக் கொள்ள விரும்பினார். சுவாமிஜியின் அனுக்கிரகத்துடன் ஒரு நாள் எளிய நிகழ்ச்சியில் தீட்சை பெற்றார். அடக்கம் காரணமாகவும், வீண் வம்பைக் குறைக்கும் நோக்கத்துடனும் இந்தத் தீட்சை விவரம் பகிரங்கப்படுத்தப்படவில்லை. அப்போது அவருக்கு வயது முப்பத்து மூன்று.

நோயுடன் போராடிய இப்பெருமகளுக்கு ஏற்ற நினைவுச் சின்னம் பெண்கள் மருத்துவமனைதான் என்று காந்திஜி கருதினார். அவரே அடிக்கல் நாட்டி, ஐந்து லட்சம் வசூலித்துக் கட்டிய கட்டடத்தை அவரே திறந்தும் வைத்தார்.

இமயத்தின் மடியில் குணமாகாத நோய் ஐரோப்பாவில் குணமாகலாம் என்று கமலாவை அங்கு இரண்டாம் முறை அழைத்துப் போனார்கள். உடல் குணமாகவில்லை. நிலைமை கவலை அளிக்கவே சிறையிலிருந்த ஜவாஹர் விடுதலை செய்யப்பட்டார். இறுதி நாளில் மனைவியுடன் இருக்க விமானத்தில் பறந்தார். கணவனைக் கண்டதும் சற்றுக் குணம் தெரிந்தது. இங்கே ஜவாஹரைக் காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுத்தார்கள். மனைவியிடம் குணம் தெரிவதால் 1936ம் ஆண்டு பிப்ரவரி 28ந் தேதி இந்தியாவுக்குப் புறப்படலாம்; காங்கிரஸ் மகாநாடு முடிந்ததும் திரும்பலாம் என்றிருந்தார் ஜவாஹர். ஆனால் அந்தத் தேதியில் ஜவாஹர் புறப்படவில்லை — கமலா புறப்பட்டு விட்டார், இம் மண்ணுலகிலிருந்து.

ஆதாரம்: ப்ரோமில்லா கல்ஹன் எழுதிய **கமலா நேரு — வாழ்க்கை வரலாறு.**

கட்டுரை: **தம்பி சீனிவாசன்**

# ராஜ நாகம்



இது வரையில் வில்லனாகவே பார்த்துப் பழகிப்போன ஸ்ரீகாந்த்தை ஹீரோவாகப் பார்க்கிறோம். சிறு வயதிலிருந்தே பரம துஷ்டனாக வளர்ந்த கிருஷ்ணமூர்த்தி பெரியவனான பிறகும் மாறவில்லை. அவன் முரடனானாலும் தானாக யாரிடமும் சண்டைக்குப் போகிறவன் அல்ல; ஆனால் யாரேனும் அவனிடம் வலிய சண்டைக்குப் போனால் இலேசில் அவர்களை விடமாட்டான். பள்ளிக்கூட உபாத்தியாயரிடம் மட்டும் மிகவும் மரியாதை உடையவன். சற்றுப் புதுமையான போக்கு உடைய திரைக்கதை நன்றாய்ப் பின்னப்பட்டிருக்கிறது. கர்நாடக மாநிலத்தில் வெள்ளி விழாக் கொண்டாடிப் பெரும் வரவேற்பைப் பெற்ற "நாக ஹாவு" என்ற கன்னடப் படத்தின் தமிழாக்கம்தான் இப்படம். ஈஸ்ட்மென் கலரில், எழில் பொங்கும் இயற்கைக் காட்சிகளுடன் அற்புதமாகத் தயாரிக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீகாந்தின் நடிப்பு மிகவும் இயற்கையாக இருக்கிறது. சதா முகத்தைச் சிடுசிடுவென்று வைத்துக்கொண்டு துடிப்பாக நடந்து கொள்வதிலிருந்து பிரின்ஸிபல் வீட்டில் கல்லெறிவது, மனோரமாவின் கோழிகளை அவன் வீட்டுக்குச் சென்று துரத்துவது, கல்லூரி மாணவிகளிடம் முறைப்பது, மாணவி மார்கரெட்டிடம் சவால் விடுவது ஆகிய எல்லாக் கட்டங்களிலும் தம் பாத்திரத்தை நன்கு புரிந்து கொண்டு சிறப்பாக நடித்திருக்கிறார். அவருக்குப் பாராட்டு!

மஞ்சுளா ரசிகர்கள் மனத்தில் பதியும்வண்ணம் நடித்திருக்கிறார். முரடன் கிருஷ்ணமூர்த்தியிடம் மனத்தைப் பறிகொடுத்து விட்டு, சாதி காரணமாக அவனைப் பிரிய நேரும் கட்டத்தில் படம் பார்ப்பவர்களை நெகிழ்த்தி விடுகிறார்.

மார்கரெட் பாகத்தில் சுபா ஏ ஒன்! வகுப்பில் கிருஷ்ணமூர்த்தியைத் தன் காட்டமான பார்வையாலேயே அலட்சியப்படுத்துவது பிரமாதம். கடைசியில் அவனிடமே நெகிழ்ந்து, அவன் அன்பைப் பெறும் காட்சியில் 'சபாஷ் சுபா!' என்று சொல்லத் தோன்றுகிறது.

மனோரமா ஆங்கிலோ இந்திய மாதாக வந்து வெளுத்து வாங்குகிறார். பட படவென்னும் அவர் பேச்சு, முக பாவங்கள் எல்லாமே அமர்க்களம்தான். மகளைத் தன் வழிக்குக் கொண்டுவர முடியாமல் படும் வேதனையை மிக இயல்பாக வெளிப்படுத்தி யிருக்கிறார்.

மேஜர் சுந்தரராஜனுக்கு மிகவும் முக்கியமான பாகம். முரட்டு மாணவனிடம் தனிப்பிரியம் கொண்டு, அவனை அன்புடன் பேணி வளர்த்த பள்ளி உபாத்தியாயர். மிக நன்றாய் நடித்திருக்கிறார்.

ஆமாம், தெரியாமல்தான் கேட்கிறேன், ஒரு பிரபல கன்னடப் படத்தை அப்படியே தமிழாக்கிவிட்டு, திரைக் கதை: என். எஸ். மணியம் என்று போட்டுக் கொள்வது தர்மம்தானா?



நல்ல வசனத்துக்கும், சிறப்பான டைரக்ஷனுக்கும் அவர் பெயரைப் போட்டுக் கொண்டிருப்பது மிகவும் பொருத்தமானதுதான். சி. ராமச்சந்திரனின் வண்ணப் பட ஒளிப்பதிவு சிறப்பான அம்சம்.

சுவையான பல அம்சங்களையும், சற்றுப் புதுமையான கதைப் போக்கையும் கொண்ட படம் "ராஜ நாகம்."

—காந்தன்

# அரிசி இங்கே! பானை எங்கே?

ரா. விழிநாதன்




தூக்ளக் மன்னனைப் போல் ஆட்சியினர் உத்தரவுகள் போட்டு, உத்தரவுகளைத் திரும்பப் பெற்ற நேரத்திலே எத்தனையோ சுயநலமிகள் 'எரிந்த வீட்டில் பறித்தது ஆதாயம்' என்ற கதையாக அரிசியைக் கடத்திப் பணம் பண்ணிவிட்டார்கள். அரிசி மாநிலம் கடந்தே போய்விட்டது என்று அடிபட்டதும் விஷத்தைக் காட்டிலும் விலை ஏறியது மட்டுமா? 'பானை இங்கே, அரிசி எங்கே?' என்று கேட்கும் அளவுக்கு ஒளிந்து கண்ணாமூச்சி விளையாடி விட்டது. அரசுக்கே அது பெருந் தலைவேதனையாகி இன்னும் பல உத்தரவுகளைப் போட்டுக் குட்டையைக் குழப்பிய நேரத்திலே, 'உடுக்கை இழந்தவன் கை'யாக உதவ முன் வந்தவர் முதலியார்.

எங்கிருந்து எப்படித்தான் அரிசி கொண்டு வந்தாரோ? வகை வகையான அரிசிகளை மலிவான விலையில் சில்லறையாகவும் மொத்தமாகவும் வாரி வழங்கி 'வள்ளல்' என்று நகரத்தாரால் பாராட்டப் பெற்றார். அந்தப் பெருமையை நகரத்தார் தட்டிக் கொண்டு போய் விடக் கூடாதே என்ற நல்லெண்ணத்தில் அரசு ஒரு விழாவுக்கு ஏற்பாடு செய்தது. அதில் பேசிய மாநில முதல்வர் காரசாரமாக ஆற்றிய சொற்பொழிவின் சாரமாவது:

''பாரி வள்ளலை மூவேந்தர் படையெடுத்துப் புறங் காணச் செய்ய முயன்ற கதை பார்

அறியும். பல மாதங்கள் பாரி நிலத்தை முற்றுகையிட்டும், ஓர் உயிராவது உணவு இன்றி உயிர் துறக்கவில்லை என்பதை ஊர் அறியும். பாவேந்தர் கபிலர் பெருமான் பகருகின்றார், 'பாரி வள்ளல் வளர்த்த பறவைகள் நெற்கதிரை அலகுகளில் ஏந்தி வந்து குவித்துப் பாரி மக்களைப் பட்டினியினால் வாடவிடாமல் காத்து உதவின' என்று! அதுபோல் மூன்று என்ன, முந்நூறு கட்சிகள் ஒன்று கூடிச் செக்குத் தள்ளி இவ்வூரைக் கவிழ்க்க முயன்ற வேளையிலே, மக்களுக்கு வேண்டிய அரிசி வழங்கி அரசின் கரத்தை வலுப்படுத்திய நெல்லுரங்க முதலியாருக்கு 'அரிசி வள்ளல்' என்னும் பட்டம் சூட்டி இவ்வூரு மகிழ்கிறது!''

இப்படி வள்ளல் பட்டம் பெற்ற முதலியாரின் அரிசிக் கிடங்கு இருந்ததோ, ஊருக்கு ஒதுக்குப்புறமான ஓர் இடம். சின்னஞ் சிறு குடிசை. ஆனால் தேவைக்கு ஏற்ப அரிசி வந்து கொண்டேயிருந்தது. ஆரம்பத்தில் தேர்க் கூட்டம் திருவிழாக் கூட்டமாக மொய்த்த மக்கள், மூட்டை மூட்டையாக அரிசி வாங்கிப் போன மக்கள், அரிசிப் பஞ்சம் வராது என்று உறுதியாகிவிடவே, தேவைக்கேற்பச் சிறுக வாங்கிச் செல்லும் பழக்கத்தை மேற் கொண்டனர்.

''முதலியார்வாள்! பத்துக் கிலோ அரிசி போக நூறு ரூபாய்த் தாளுக்குச் சில்லறை இருக்குமா ?'' என்று கேட்டான் ஓர் இளைஞன்.

''சில்லறைக்கென்ன பஞ்சம் தம்பி, வேண்டியது தருகிறேன்!'' என்று கூறிய முதலியார் ரூபாய் நோட்டுக்களை எடுத்துப் போட்டார். ஐந்து ரூபாய், பத்து ரூபாய், ஒரு ரூபாய் என்று! எல்லாம் ஒரே அழுக்காக இருந்தன.

இளைஞன் வெற்றிலைக் கவுளி பிரிப்பது போல் அழுக்கு நோட்டுகளைத் தனியாகவும், கொஞ்சம் நல்ல நோட்டுக்களைத் தனியாகவும் வைத்துக் கொண்டு தயங்கி நின்றான், நோட்டுக்களை மாற்றித் தருமாறு கேட்டால் முதலியார் கோபித்துக் கொள்ளுவாரோ என்று !

ஒரு முறை செட்டியார் கடையில் கடலெண்ணெய் வாங்கிக் கொண்டு, அவன் இருபது ரூபாய் நோட்டு ஒன்றை நீட்டினான். அவர் திரும்பத் தந்த நோட்டுக்கள் மிக அழுக்காக இருந்தன. 'வேறு நோட்டு தரமுடியுமா?' என்று அவன் கேட்ட பொழுது கல்லாப் பெட்டியைத் திறந்து, கைப்பிடியாகச் சில நோட்டுக்களை எடுத்துப் போட்டார் செட்டியார். ''சர்க்கார் கொடுக்கிற நோட்டு. நல்லதாப் பார்த்துப் பொறுக்கி எடுத்துப் போ. பாங்கியிலே



போய்க் கேட்டாக்கூடப் புது நோட்டுத் தர மாட்டேங்கிறாங்க! நான் என்ன செய்வது?'' என்று சிடுசிடுத்தார். முன்பு கொடுத்த நோட்டுக்களே எவ்வளவோ மேல் என்று கூறும் அளவுக்கு இந்த நோட்டுக்கள் கசமாக இருந்தன.

''என்ன தம்பி, என்ன யோசிக்கிறே ?'' என்றார் முதலியார்.

''வந்து... இந்த நோட்டுக்களை மாற்றிக் கொண்டு கொஞ்சம் நல்ல நோட்டுக்களாகத் தருவீர்களா ?'' என்று தயக்கத்துடனேயே கேட்டான் இளைஞன்.

'' தயங்குவானேன்? புது நோட்டுக்களாகவே தருகிறேன்!'' என்று கல்லாவைத் திறந்தார் முதலியார். அவனுக்குக் கொடுக்க வேண்டிய அளவுக்குச் சில்லறை நோட்டுக்கள் இருப்பதாகத் தெரியவில்லை.

''டேய், பையா! சைக்கிளை எடுத்துக்கிட்டு ஓடிப் போய்ப் பாங்கியிலிருந்து புது நோட்டுகளாகச் சில்லறை கேட்டு வாங்கி வா, இந்த நூறு ரூபாய்க்கு!'' என்றார் முதலியார். ''தரமாட்டேன்னு சொன்னாங்கன்னு, நான் சொன்னேன்னு மந்தாகினி அம்மாகிட்டம் கேட்டு வாங்கி வா!'' என்றார்.

சில நிமிஷங்களுக்கெல்லாம் புதுக் கருக்கு அழியாத நோட்டுக்களாக மொறமொற என்று வாங்கிக் கொண்டு வந்தான் பையன்.

அவற்றிலிருந்து தனக்குச் சேர வேண்டிய சில்லறையை வாங்கிக் கொண்ட இளைஞனுக்குப் பரம திருப்தி.

தன் குடியிருப்புக்குப் போனவன், 'முதலியார் அரிசி மட்டும் நல்லதாகத் தரவில்லை; ரூபாய் நோட்டுக்களும் புதிது புதிதாகத் தருகிறார்!'' என்னும் செய்தியைப் படர விட்டான்.

அழுக்கு நோட்டுக்களையே பார்த்துப் பழகிவிட்ட மக்களுக்குப் புது நோட்டுக்களைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை பற்றிக் கொண்டது. நோட்டுக்களுக்குச் சும்மா சில்லறை கேட்க முடியுமா? எனவே, அரிசியும் வாங்கிக் கொண்டனர். முதலியாருக்கு வியாபாரத்துக்கு வியாபாரம் வலுத்தது. அதோடு நல்ல பெயர், சில்லறை நோட்டுக்களும் புதிதாகத் தருகிறார் என்று! அன்றுஅவர்யாரிடமோ வேடிக்கையாகச் சொல்லிக் கொண்டிருந்தார். ''ஆதாயம் இல்லாமல் செட்டியார் ஆற்றோடு போக மாட்டார் என்று ஒரு சவனம் உண்டே, தெரியுமா? நான் புது நோட்டுக்களாகத் தருவதனால் எனக்கு அரிசி வியாபாரமும் நல்லா நடக்குது! அதனால் லாபமும் அதிகமாக வருது!''

அவர் இப்படிக் கூறிக் கொண்டிருக்கும்போது இரண்டொரு எலிகள் சடுகுடு விளையாடின. குடிசைக்குள் ரம்பம் போட்டு அறுப்பது போன்ற ஓசை வந்தது.

''என்ன முதலியார்வாள்! எலி உபத்திரவம் ஜாஸ்தியாயிருக்கும் போல் இருக்கிறதே!'' என்றார் ஒரு வாடிக்கைக்காரர்.

''அதை ஏன் கேட்கிறீங்க? இந்த எலிகள் அரிசியை ரொம்ப நாசப்படுத்திவிடுகின்றன! இல்லாவிட்டால், இன்னும்கூட அரிசியை விலை குறைச்சே விற்பேன்!'' என்றார் முதலியார்.

''முதலியார் ! உங்க மனசு ரொம்ப நல்ல மனசு ! உங்களுக்கு விழா எடுக்கனும் முதலியார்!''

''அந்த எழவெல்லாம் வேண்டாங்க.... ஜனங்க கஷ்டப்படாமல் வயிறார உண்டால், அதுவே நமக்குத் திருப்திங்க. இந்தச் சர்க்கார் பழம் நோட்டையே கொடுத்துக் கழுத்தை அறுக்கிறதா? மக்களுக்கு அந்தளவு அழுக்கைக் கண்டாலே பிடிக்கலே. அதுக்காக நான் என்ன பண்ணினேன்னு, நமக்குச் சொந்தக்காரப் பொண்ணு ஒண்ணைப் பாங்கு வேலைக்கு அனுப்பிச்சேன்! நான் சில்லறை கேட்டால் கொஞ்சம் புதுநோட்டாப் பார்த்து அனுப்பி வை அம்மான்னு சொல்லியிருக்கேன்! ஏழையின் சிரிப்பிலே இறைவனைக் காண்பது போன்ற மகிழ்வு இதில் ஏற்படுகிறது!'' என்று சமாளித்தார்.



''பத்மாயிசம் தான் உன் கொள்கை என்றாயே! யார் அந்த பத்மா?''

''என் பெண்டாட்டி! அவள் என்ன சொல்கிறாளோ அதற்கு அடிபணிவதுதான் என்னுடைய கொள்கை.''



''அது பாட்டி; இது பேண்ட்டி !''

'நூறு ரூபாய் நோட்டு செல்லாது என்று அவசரச் சட்டம் பிறப்பிக்கப் போகிறார்களாமே!' யாரோ அவசரமாக இந்த வதந்தியைப் பரப்பவே, அது காட்டுத் தீயாகப் பரவியது. முதலியார் கடைவாசலில் அரிசி 'க்யூ'வைக் காட்டிலும் பெரிய க்யூ நின்றது நூறு ரூபாயை மாற்ற.

'' நூறு ரூபாய்த் தாள் சீனாவிலிருந்து அடித்து வந்ததாம். நம் பொருளாதாரத்தைத் தவிடு பொடியாக்கச் சீனாக்காரன் செய்த சதியாம்!'' இப்படிப் பேசிக் கொண்டவர்கள் முதலியாரை அணுகிக் கேட்டார்கள்.

''ஒரு நிமிஷம் இருங்க! ஒரு நோட்டைப் பாங்குக்கு அனுப்பிச்சுப் பார்க்கிறேன். செல்லுபடியாகி விட்டால் அப்புறம் உங்களுக்கு என்ன கவலை?'' என்றார் முதலியார்.

சில நிமிஷங்களுக்கெல்லாம் முதலியார் கையில் புத்தம் புதிய இருபது ரூபாய்த் தாள்கள் படபடத்தன.

''முதலியார்! எதற்கு வீண் வம்பு? எங்கள் நோட்டுக்களையும் சில்லறையாக மாற்றிக் கொடுத்துவிடுங்களேன்!'' என்றனர் கூடியிருந்த பலரும். மறுநாள் காலை மாற்றித் தந்துவிடுவதாக வாக்களித்து அவர்களை அனுப்பி வைத்தார்.

அன்றிரவு முதலியார் குடிசைக் கடையில் எலிகளின் நடமாட்டம் அதிகம்..... தரையை அறுப்பது போலவும் சாமான்களை உருட்டித் தள்ளுவது போலவும் ஓசை.

சொன்னபடி முதலியார் வாடிக்கைக்காரர்களுக்குச் சில்லறையாக மாற்றித் தந்துவிட்டார்.

சில நாட்களுக்கெல்லாம் இருபது ரூபாய் நோட்டிலிருந்து இரண்டு ரூபாய், ஒரு ரூபாய் நோட்டு வரை பொய் நோட்டுக்கள் உலவுகின்றன என்றும், அதை ருஷ்யன் அடித்தான், இதைப் பர்மியன் அடித்தான் என்றும் பேச்சு அடிபடலாயிற்று. பண வீக்கம் பெருத்துவிட்டதற்கு அதுவும் ஒரு காரணம். எனவே இன்னின்ன நோட்டுக்களை செலாவணியாகாது என்று அரசு அவசரச் சட்டம் பிறப்பிக்கப் போகிறது என்றெல்லாம் கூடப் பேசிக் கொண்டார்கள். மக்களுக்கு ரூபாய் நோட்டின் மீதிருந்த நம்பிக்கை போய் விட்டது.

அதற்கேற்றாற் போல் அன்று பாங்கியில் ஒரே நம்பர் உள்ள இருபது ரூபாய் நோட்டுக்கள் பல ஒரே கட்டில் கிடைத்தன.



Comfit
SANITARY TOWELS



"உமன்ஸ் லிப்!"

ஆண்களோடு பெண்களுக்கும் சம உரிமை வேண்டும் என்ற போராட்டத்தின் அடிப்படையில் வெற்றி கண்டு அமெரிக்க ராணுவத்தில் முதல் பெண் விமானியாகச் சேர்ந்திருக்கிறாள் ஸாலி. படத்தில் இருபத்தைந்து வயதான இவள் ஹெலிகாப்டரில் அமர்ந்து விசைகளை இயக்குகிறாள்.

○





சென்னை, டேவிட்ஸன் தெருவில் சிந்தாமணி சூப்பர் மார்க்கெட் அண்மையில் தொடங்கப்பட்டிருக்கிறது. தமிழ்நாடு உணவு அமைச்சர் மன்னை நாராயணசாமி திறந்து வைத்தார்.



முப்பத்தேழு சைக்கிள் வீரர்கள் காஞ்சிபுரத்துக்குக் கிளம்பினர். அவர்களில் ஒன்பது பேரே சென்னைக்குச் சைக்கிளில் திரும்பினர். இருபத்துமூன்று வயது பல்தேவ் எஸ். சாந்து முதலாவதாக வந்தார். விமானப் படையைச் சேர்ந்தவர். ஹூம் இன்வெஸ்ட்மெண்ட் வெள்ளி விழாவில் நடந்த போட்டி இது.

---

காசாளராகப் பணியாற்றி வந்த மந்தாகினியிடமிருந்து அந்த நோட்டுக்களை வாங்கிய வாடிக்கையாளர் அதைக் கவனித்துக் கேட்கவே, மந்தாகினி திகைத்தாள். ஆண்களைப் போல் அவள் எடுத்து வரும் 'பிரீஃப் கேஸ்' சோதனையிடப்பட்ட பொழுது பழைய நோட்டுக்கள் அதில் ஏராளமாய்க் கிடைத்தன. புதிய நோட்டுக்களும் தாராளமாய்க் காட்சி அளித்தன.

புலனாய்வுத் துறை சூடு பிடித்து வெகு வேகமாக இயங்கியது. முதலியாரின் குடிசைக் கடை, அரிசிக் கடை மட்டும் அல்ல; பொய் நோட்டுக்கள் தயாரிக்கும் அச்சுக்கூடத்தை அடியறையாகக் கொண்டிருக்கிறது என்பதும் தெரிந்தது. சம்பந்தப்பட்ட சிலர் சிறைப்பட்டனர். அவர்களில் சீனன் என்ற பெயருள்ளவன் ஒரு தச்சன், ஸ்டாலின் என்பவன் ஒரு கருமான், பர்மியன் என்பவன் போலி நோட்டுக்கள் தயாரிப்பதில் வல்லவன் என்பதெல்லாம் ருசுவாகியது. ஆனால் இப்படி எத்தனை நோட்டுக்கள் செலாவணிக்குச் சென்றன என்பதுதான் கணக்கில் அகப்படவில்லை. அது அரிசி வள்ளல் நெல்லுரங்க முதலியாருக்கு மட்டுமே தெரியும். ஏனெனில் அவர் அத்தனை ரூபாய்க்கும் பிஸ்கெட் வாங்கி வைத்திருந்தார். எத்தனை எலிகள் நடமாடினாலும் அந்தப் பிஸ்கட்டுக்களை அவை லட்சியம் கூடச் செய்யாது! ஆம், அத்தனையும் தங்க பிஸ்கட்டுக்கள்! மனிதனைத் தவிர வேறு எந்த ஜன்மம் அதற்கு ஆசைப்படும்? அப்படி ஆசைப்பட்ட நெல்லுரங்க முதலியாரின் கரங்களைத் தங்கக் காப்புக்குப் பதிலாக இரும்புக் காப்பு அலங்கரித்த அன்று ஊரே விழாக் கோலம் பூண்டிருந்தது. 'அந்த எழவெல்லாம் வேண்டாங்க' என்று சொன்ன முதலியார் பேச்சைக் கேட்காமல் மக்கள் சாரி சாரியாக அவரைக் கண்டு மரியாதை செலுத்த வந்தவண்ணம் இருந்தனர்.

என்றாலும் மத்திய சர்க்காருக்கு ஒரு தலைவலி. இந்தக் காகிதப் பஞ்ச காலத்தில், விலைவாசியும் கூலியும் ஏறி நிற்கும் இந்த நாளில் முதலியார் தயாரித்த அத்தனை நோட்டுக்களும் செல்லாது என்று பிரகடனப்படுத்திப் புது நோட்டுக்கள் அச்சிட்டு வழங்குவதென்றால் சாத்தியமாகுமா ?

எனவே சாத்தியக் கூற்றை ஆராய்ந்து, மத்திய அரசும் மாநில அரசைப் பின்பற்றி நெல்லுரங்க முதலியாருக்கு 'புது நோட்டுப் பெம்மான்' என்னும் விருதை வழங்கி மகிழ்ந்தால் ஆச்சரியமில்லைதானே?

## பக்குவ முறை :

2 கோப்பை மைதா

3 தேக்கரண்டி (தலைதட்டிய அளவு)
<u>ரெக்ஸ் பேகிங் பவுடர்.</u>

1 கோப்பை சர்க்கரை

½ கோப்பை வெண்ணை

¾ கோப்பை பால்

4 மேஜைக்கரண்டி (தலைதட்டிய அளவு) கோக்கோ.

¼ தேக்கரண்டி உப்பு.

1 தேக்கரண்டி வனில்லா எஸ்ஸன்ஸ்.

¼ கோப்பை துருவிய தேங்காய்.

¾ கோப்பை பொடியாக நறுக்கிய அக்ரோட்டு.

1. மைதா, உப்பு, ரெக்ஸ் பேகிங் பவுடரை ஒன்றாகச் சேர்த்து சலித்து எடுக்கவும். வெண்ணையையும் சர்க்கரையையும் விழுதுபோல் ஆக்கவும். கோக்கோவை சூடான சிறிது பாலுடன் கலந்து, விழுதாக்கிய வெண்ணை-சர்க்கரையுடன் சேர்க்கவும். நன்றாகக் கிளறவும்.

2. துருவிய தேங்காயை ஒரு தேக்கரண்டி நெய்யில் பொன்னிற-மாகும் வரை வறுத்து எடுக்கவும். தயாரிக்கப்பட்டுள்ள மைதா, பேகிங் பவுடர், வெண்ணை முதலிய கலவையுடன் தேங்காயை சேர்க்கவும். நன்றாகக் கிளறவும்.

3. அத்துடன் ½ கோப்பை நறுக்கிய அக்ரோட்டையும் வனில்லா எஸ்ஸன்ஸையும் சேர்க்கவும். நன்றாகக் கலக்கவும். அதை நெய் தடவிய சிறு அச்சுகளில் ஊற்றவும். மிஞ்சியுள்ள அக்ரோட்டால் அதை அலங்கரிக்கவும். அடுப்பில் வைத்து 12—15 நிமிடங்கள் வரை வாட்டவும்.

கார்ன் ப்ராடக்ட்ஸ்
தேர்ந்தெடுத்த பரிசு-பெற்ற
பக்குவ முறை

# முட்டை கலவாத சாக்லேட் கேக்

தயாரிக்க
உதவுவது
ரெக்ஸ்
பேகிங் பவுடர்




**உங்கள் சமையல் உன்னதமாக இருக்க உயர்ந்த சாமானையே உபயோகியுங்கள்.**

**கார்ன் பிராடக்ட்ஸ் கோ.
(இந்தியா) பிரைவேட் லிட்.**
ஸ்ரீநிவாஸ் ஹவுஸ், எச். ஸோமானி
மார்க், பம்பாய்-400 001.

OBM-1049 TM

# நிந்தனை : ஒரு வரப்பிரசாதம்

குயிலி ராஜேஸ்வரி

"மஞ்சு மன்னி வந்துட்டா" என்று இரைந்து கூறினாள் லட்சுமி அம்மாளின் இரண்டாம் மருமகள் லீலா.

"அப்படியா?" எனக் கேட்டுக்கொண்டே ஓடிவந்தாள் மூன்றாம் மருமகள் இந்திரா.

"மன்னி மட்டுமா வந்திருக்கா? வண்டி தாங்காமே சாமான்களும்னு கொண்டு வந்திருக்கா. அப்பப்பா! எத்தனை சாமான்கள்!" என்றாள் லீலா.

"சாமான்கள் இருக்கட்டும். அண்ணா கூட வந்திருக்காரா?" என வினவினாள் இந்திரா.

"வழக்கம் போல்தான். அவர் இந்த இடத்தில் வந்து என்ன செய்வார் பாவம்? நம்மைப் போலவா? ஒரு நாள் என்றால் அவருக்கு எத்தனை ஆயிரங்கள், ஹூம்!" என்றாள் லீலா.

அடுத்த அறையில் உட்கார்ந்திருந்த லட்சுமி அம்மாள் இதையெல்லாம் கேட்டுக் கொண்டு தான் இருந்தாள். மஞ்சு அவளுடைய முதல் மருமகள். அவளுடைய குடும்பம் என்னவோ மிகச் சாதாரணமானதுதான். இந்த மூன்று பிள்ளைகளையும் மிகக் கஷ்டப்பட்டுத் தான் படிக்க வைத்தாள். முதல் பையன் ரொம்பச் சாதாரண வேலைதான் செய்து கொண்டிருந்தான். இரண்டாம் பையன் லலித் கல்லூரிப் பேராசிரியர். மூன்றாம் பையன் மோகன் பெரிய என்ஜினீயர். மூத்த மருமகள் மஞ்சு சாதாரணக் குடும்பத்தில் இருந்து வந்தவள்தான். ஆனால் லட்சுமி அம்மாளின் மனத்துக்குகந்த மருமகள் அவள். எந்தக் கஷ்டத்தையும் வெளிக்குக் காட்டிக் கொள்ள மாட்டாள். எந்தச் சந்தோஷத்தையும் பெரிதாகக் காண்பித்துக் கொள்ள மாட்டாள்.

பேராசிரியரை மணம் புரிந்துகொண்ட லீலா சீரோடும் பெருமையோடும் வந்தவள். மூத்த மருமகளைவிடச் செல்வத்தோடு வந்தவள். அடுத்தவள் இந்திரா செட், செட்டாக நகைகள் கொண்டு வந்திருந்தாள்.

ஏதாவது விசேஷங்களுக்குச் சேர்ந்து செல்லும்போது "நீங்க இஷ்டப்பட்ட செட் நகைகளை எடுத்துக்குங்கோ மன்னி. என் நகை என்றால் நீங்கள் போடக் கூடாதா?" என்று உரிமைபோல் பெருமையாகச் சொல்லுவாள் இந்திரா.

"எனக்கு எதற்கம்மா? நீதான் சின்னவள் விதவிதமாகப் போட்டுக் கொள்ள வேண்டும்!" என்று சிரித்தே ஒதுக்கிவிடுவாள் மஞ்சு.

லட்சுமி அம்மாள் இதையெல்லாம் கண்டு கொண்டதாகவே காட்டிக் கொள்வதில்லை. சின்ன மருமக்கள் இருவருக்கும், தங்கள் கணவன்மார்கள் கைநிறையச் சம்பாதிக்கிறார்கள், மூத்தவர் சற்று மட்டு வருமானம் உள்ளவர் என்ற நினைப்பு மேலோங்கி நின்றது.

காலத்தின் போக்கில் திடீரென்று ஒளி பாய்வது போல் மூத்த மகன் மாதவனுக்கு அடித்தது அதிர்ஷ்டம். எப்படியோ ஆரம்பித்து, எப்படியோ திரும்பி அவனைத் திரைப்படத் தயாரிப்பாளராக ஆக்கியது. வீடு, கார் என்று இணைந்த வசதிகள் மற்ற இருவரையும் மனத்துக்குள் பொறுமத்தான் செய்தது. மஞ்சு என்னவோ சிறிதும் மாறவில்லை. அன்று, இல்லாததை எப்படி வெளியில் காட்டிக்கொள்ளாமல் இருந்தாளோ, அப்படியே இன்று தனக்குக் கிடைத்த அதிர்ஷ்டங்களைப் பெரிதுபடுத்தாமலும் இருந்தாள்.

மூன்று பிள்ளைகளும் தனித்தனியாக இருந்தாலும் தாயின் பிறந்த தினத்தைக் கொண்டாடக் குடும்பத்தோடு வந்து விடுவார்கள்.

இம்முறையும் கூடியபொழுது இரண்டு சின்னப் பிள்ளைகளும் தங்கள் மனைவிமார்களோடு வந்தனர். மூத்தவனைத்தான் காணோம்.

மஞ்சு வந்து மாமியாரை நமஸ்கரித்தாள்.

"நீ மட்டும்தான் வந்திருக்காயா, மஞ்சு?" என்றாள் லட்சுமி அம்மாள்.

"உங்கள் பிள்ளை நாளைக்குக் கண்டிப்பாக வருவதாகச் சொல்லி யிருக்கார் அம்மா. அவர் வேலை மிகுதியினால் என்னுடன் புறப்பட்டுவர முடியவில்லை!" என்றாள் அவள்.

பக்கத்து அறையில் மருமக்களின் குரல்கள் தொடர்ந்து கேட்டன. "என்ன பணம் இருந்து என்ன? வேலை அதிகமாம். மன்னி அம்மாவிடம் அழகாகக் கதை திரிக்கிறாள். எந்த எக்ஸ்டிராவோடு காரில் பட்டண பவனி வந்து கொண்டிருக்கிறாரோ, அண்ணா!" என்றாள் லீலா.

"உங்களுக்குக் கூடத் தெரியுமா சின்ன மன்னி? நான் இருக்கிற இடத்திலே அண்ணாவின் பிரதாபங்களைப் பத்திப் பேசாதவா இல்லை. எனக்கே கூசிப் போகிறது. பெரிய மன்னி எப்படித்தான் ஊரில் நடமாடுகிறாளோ தெரியவில்லை" என்றாள் இந்திரா.

ஆனால் மஞ்சு சொன்னபடி மறுநாள் மாதவன் வந்து விட்டான். பட்டும் பட்டாடையுமாக ஊரே வியக்கும் வகையில் அமர்க்களம் செய்துவிட்டான். அவன் வந்த காரும் கொண்டு வந்த பொருள்களும் ஊரையே வியக்கச் செய்தன.

அன்றையப் பொழுது மிக இனிதாகச் சென்று விட்டது. மறுநாளே எல்லோரும் தத்தம் வீடுகளுக்குப் புறப்பட்டு விட்டனர். மஞ்சு மட்டும் இரண்டு மாதங்கள் மாமியாருக்குப் பணிவிடை செய்துவிட்டு வருவதாகக் கூறித் தங்கி விட்டாள்.

மருமகளைத் தடவிக்கொடுத்தவாறு "மாது உன்னிடம் பிரியமாக இருக்கிறானா அம்மா? உன்னைப் பார்த்து எந்த முடிவுக்கும் வர முடியவில்லை. ஊரில் பேசுவதை அலட்சியம் செய்யவும் முடியவில்லை" என்றார் மாமியார் கண்களில் நீர் ததும்ப.

"நீங்கள் இப்படி வருந்துகிற அளவுக்கு ஒன்றுமே இல்லையம்மா. நீங்கள் எந்தக் கவலையும் வைத்துக் கொள்ளாதீர்கள்" என்றாள் மஞ்சு.

லட்சுமி அம்மாள் வாயே திறக்கவில்லை.

இரண்டு மாதங்கள் ஓடிவிட்டன. "நீ சொன்னது போல் தம்பிகள் இருவருக்கும் இந்த மாதமும் பணம் அனுப்பிவிட்டேன். நான் சம்பாதிக்கும் பணம் அவர்களுக்கு இல்லாமல் வேறு எதற்கு?" என மஞ்சுவுக்கு எழுதியிருந்தான் மாதவன்.

ஊஞ்சல் ஆடிக் கொண்டிருந்த லட்சுமி அம்மாள் வாயிலில் யாரோ வரும் ஒலி கேட்டு எட்டிப் பார்த்தாள். காற்று எனப் பாய்ந்து வந்து காலடியில் வீழ்ந்தாள் இரண்டாவது மருமகள் லீலா.

"என்னம்மா, லீலா! உடம்புக்கு ஒன்றும் இல்லையே!" என்று பரிவோடு கேட்டாள் லட்சுமி அம்மாள்.

"உடம்புக்கு ஏதாவது வந்திருந்தால் கூடத் தேவலாம் அம்மா. உங்க பிள்ளைக்கு வீட்டு நினைவே இல்லை. எப்போ பார்த்தாலும் அவருடன் பணிபுரியும் பாமாவுடனேயே சுற்றிக்கொண்டிருக்கிறார். அண்ணா மாதா மாதம் பணம் அனுப்புவது இப்படி வீணாகிறது!" என்றாள் அவள் நெஞ்சடைக்க.

எப்படிச் சமாதானம் செய்வது என அவள் சிந்தித்துக் கொண்டிருக்கையில் இந்திராவும் வந்தாள். "யார் கண் போட்டார்களோ, அம்மா! எங்கள் வாழ்வின் அமைதியே குலைய ஆரம்பித்து விட்டது. நல்ல வசதிகளைச்செய்து கொள்ள அண்ணா பணம் அனுப்பினால் அது குதிரைப் பந்தயத்தில் வீணாகிறது. அவர் குதிரைப் பந்தய மைதானமே கதியாகி விட்டார். அண்ணா அனுப்பிய பணம் மட்டுமல்ல, என் நகைகளும் பறிபோய்விட்டன!" எனக் கூறி 'ஹோ'வென்று அழுதாள் இந்திரா.

இருவரையும் பார்த்துவிட்டு, "நான் கீறிய கோட்டைத் தாண்ட மாட்டார் என் கணவர் எனப் பெருமை அடித்துக்கொண்டீர்களே! அண்ணன் பணம் அனுப்பியதும் அவர்கள் எப்படி நடந்து கொண்டார்கள்? மாதவனைப் பற்றி இல்லாததும் பொல்லாததும் சொல்லி மஞ்சுவின் மனத்தை முறித்தீர்களே! அவள் தன் கணவன் தவறாகப் போகவில்லை என்பதை எப்படி நாசுக்காகக் காட்டிவிட்டாள், தம்பிமார்களுக்குப் பணம் அனுப்பச் செய்து?" என்றாள் லட்சுமி அம்மாள் நிதானமாக.

அப்பொழுது மஞ்சுவின் பெயருக்கு ஒரு கார்டு வந்து விழுந்தது. எல்லோரும் ஆவலுடன் எடுத்துப் பார்த்தார்கள்.

"'நிந்திப்பவர்களை அருகிலேயே வைத்துக் கொள். அச் செயல் நமது சுபாவத்தைத் தூய்மைப்படுத்தி விடும்' என்று கபீர்தாஸர் கூறுகிறார். உன் அதிர்ஷ்டம், உனக்கு அப்படி இரண்டு ஓரகத்திகள் கிடைத்ததால் என் குணம் கெடாமல் உன்னால் பாதுகாக்க முடிந்தது. அவர்கள் கணவன்மார்கள் குணம் கெடாமல் இருக்க இனி நான் பணம் அனுப்பப் போவதில்லை! — இப்படிக்கு உன் மாதவன்!" என்று எழுதியிருந்தது.



Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

# Please
# EXCUSE US

**if you are not able to get all the Cement— — particularly our ROCKFORT Brand Cement you require for your use. . .**

But the shortages are not because of any fault of ours.
We are doing our best,
like we have always done in the past
to serve you and the nation
by working our plants day and night-as and when possible. . .

Our Folax Kiln at Dalmiapuram, for instance, which was operated continuously for 387 days during 1971-72 established a new record-perhaps a world record. . .and if it was stopped for a few hours this was due to power failure etc. . .

And problems like POWER FAILURES, coal shortage and other problems beyond our control are today the reason why we are not able to give you all the cement you want. . .

We can assure you of more and more supplies when normalcy has been restored in power and coal supply, movement of wagons and all other such matters. Till then, please bear with us. . .





**Dalmia Cement (Bharat) Ltd.**
Dalmiapuram (Tamil Nadu)
**Manufacturers of famous ROCKFORT BRAND Quality Cement**

